உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-12
மன்மத - மார்கழி 21
5-1-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## குறிஞ்சி

சிறைப்புறத்தானாக வந்திருந்த தலைவன் கேட்டு விரைந்து வரைந்துகொள்ளுமாற்றால் தோழி தலைவியை நோக்கி அழிந்து கூறியது.

என்னெனப் படுமோ தோழி மின்னுவசி, பதிர்குர லெழிலி முதிர்கடன்
றீரக், கண்டூர்பு விரிந்த கனையிரு ணடுநாட், பண்பி லாரிடை வரூஉ
நந்திறத், தருளான் கொல்லோ தானே கானவன், சிறுபுறங் கடுக்கும்
பெருங்கை வேழம், வெறிகொள் சாபத் தெறிகணை வேரீஇ, யழுந்துபட
விடரகத் தியம்பு, மெழுந்துவீ ழருவிய மலைகிழ வோனே. 228

:-மூடத்திருமாறனார்

தோழீ! கானகத்து வேட்டுவனது முதுகு போன்ற பெரிய துதிக்கையையுடைய யானை அச்சங்கொண்ட வில்லிலிருந்து எய்யும் கணைக்கு அஞ்சி ஓசையானது மலைப்பிளப்பின் ஆழத்திலே சென்று மோதும்படி பிளிறுகின்ற குதித்து விழும் அருவியையுடைய மலைக்கிழவனை நமது காதலன் மின்னலால் இருளைப்பிளந்து முழங்குகின்ற மேகம் தனது சூல்முதிர்ச்சிக் கடன் தீரும்படி கண்ணொளி மறையப் பாத்தலினால் செறிந்த இருளையுடைய நடுயாமத்தில் இயல்பில்லாத அரிய வழியில் வந்து நம்பால் அருள்செய்வானோ? அவன் வந்து அருள்செய்யாததற்குக் காரணந்தான் என்னென்று சொல்லப்பெறுமோ?

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

ஆமாண்பொன் கூட்டகத்த வஞ்சோலிளம் பைங்கிளியே
பாமாலை யாழ்முரியப் பாணழியப் பண்டருள்செய்
மாமான சுந்தரன்வண் சம்பந்த மாமுனியெங்
கோமான்றன் புகழொருகா லின்புறநீ கூறாயே
கோச்சையர்கோன் றன்புகழ்யா னின்புறநீ கூறாயே
:-ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் 25

உரை:- "ஆம்-நன்றாகக் கட்டப்பெற்ற, மாண்-மாண்பினையுடைய, பொன்-அழகிய, கூட்டகத்த-கூட்டினுள்ளே வசிக்கின்ற, அம் சொல்-இனிமையான சொற்களையுடைய, இளம்-இளமையான, பைங்கிளியே-பசியகிளியே, பண்டு-முன்னாளிலே, யாழ் முரிய-தொடரமுடியாமையால் யாழ் தோல்வியடையவும், பாண் அழிய-அதனால் திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் மனம் வருந்தவும், பாமாலை அருள்செய்-திருப்பதிகப்பாடல்களை அருளிச்செய்த, மா மான சுந்தரன்-மிகப் பெருமைபொருந்திய அழகனாகிய, சம்பந்த மாமுனி-திருஞானசம்பந்தப் பெருமானென்னும் தவச்செல்வரான, எம் கோமான்றன்-எமது தலைவரது, புகழ்-கீர்த்தியை நீ இன்புற-நீ இன்பத்தை அடைய, ஒருகால் கூறாய்-ஒருமுறை சொல்லுவாயாக, கோச்சையர் கோன்றன்-கோச்சைப் பதியினர்க்குத் தலைவனது, புகழ்-கீர்த்தியை, யான் இன்புற-நான் இன்பத்தை அடைய, நீ கூறாய்-நீ சொல்லுவாயாக" என்பதாகும்.

பதினொராந் திருமுறையிலுள்ள இறுதிப் பத்துப் பிரபந்தங்களும் நம்பியாண்டார் நம்பிகளால் இயற்றப் பெற்றவை. நாற்பது பிரபந்தங்களுள்ள இத்திருமுறையின் ஆசிரியர் பன்னிருவரில் முன் முப்பது பிரபந்தங்களும் பதினொருவராலும் பின் பத்துப்பிரபந்தங்களும் நம்பிகள் ஒருவராலும் இயற்றப்பெற்றன வென்பது நினைவுகூரத் தக்கதாகும். நம்பிகளது பிரபந்தம் பத்தினுள்

ஆறு, திருஞானசம்பந்தரைப் பற்றியன. ஏனையநான்கும் முறையே விநாயகர், தில்லைக் கூத்தர், திருத்தொண்டர், திருநாவுக்கரசரைப் பற்றியன.

திருஞானசம்பந்தப்பெருமானைத் தலைவராகக் கொண்ட ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி திருக்கடைக்காப்புடன் நூற்றொரு திருப்பாடல்களையும், திருச்சண்பை விருத்தம்பதினொரு பாடல்களையும், திருமும்மணிக்கோவை முப்பது பாடல்களையும் திருவுலாமாலை நூற்றுநாற்பத்து மூன்று கலிவெண்பாக்கண்ணிகளையும், திருக்கலம்பகம் நாற்பத்தொன்பது பாடல்களையும், திருத்தொகை அறுபத்தைந்து கலிவெண்பாக்கண்ணிகளையும் கொண்டுவிளங்குகின்றன.

சேக்கிழார்பெருமான் அருளிச்செய்த திருத்தொண்டர்புராணம் நாலாயிரத்திருநூற்றெண்பத்தாறு செய்யுட்களைக் கொண்டது. அதில் ஆளுடைய பிள்ளையார்புராணம் மட்டும் ஆயிரத்திருநூற்றைம்பத்தாறு பாடல்களையுடையதாயிருக்கின்றது. தனியடியார் அறுபத்துமூவரும் தொகையடியார் ஒன்பதின்மரும் ஆகத் திருத்தொண்டர் எழுபத்திருவரில் ஒருவருக்கு மட்டும் 1256ம் மற்றை எழுபத்தொருவருக்கு 3030மாகவுள்ள புராண அமைப்பையொட்டிப் 'பிள்ளை பாதி புராணம் பாதி' என்று பழமொழி வழங்கி வருகின்றது. இதனை நினைவில் வைத்துக் கொண்டு நம்பிகளிடம் சென்றால் அவருடைய பிரபந்தங்களிற் பாதிக்கு மேல் ஆளுடைய பிள்ளையாரைப் பற்றியனவாயிருப்பது அறியவரும்.

குழவிப் பருவத்திலேயே, அரனோடு அம்மைதோன்றி அளித்த வள்ளச் செழுந்தண் முலைப்பால் குடித்துத் திருவருட் செல்வராக விளங்கிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரைப் போலப் பள்ளிப் பருவத்திலேயே திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரது முழுக்கருணையையும் பெற்று நற்றவக்கொழுந்தாக விளங்கியவர் நம்பியாண்டார் நம்பி. திருமுறையை வெளிப்படுத்தித் தந்த திருவாளராகிய நம்பியாண்டார் நம்பி, அத்திருமுறைகளின் முதலாசிரியரும் சைவசமயஞானாசிரியர்களில் தலையாயவருமாகிய ஆளுடைய பிள்ளையார்பால் ஈடுபட்டுப் பிரபந்தங்களை ஆக்கித் தந்திருப்பது பொருத்தமானதேயாகும்.

நம்பிகளால் தொகுக்கப்பெற்ற திருமுறைகளின்தொடக்கப்பகுதி, ஆளுடையபிள்ளையார் திருவாக்காகவும் முடிவுப்பகுதி, ஆளுடைய பிள்ளையாரது புகழாகவும் அமைந்திருப்பது இங்கே நினைவு கூரத்தக்கதாகும். ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகத்தில் இப்பொழுது கிடைக்கும் பாடல்கள் நாற்பத்தொன்பது. கலம்பகத்திற்கு இலக்கணம் கூறவந்த பன்னிரு பாட்டியல் அதன் பாடலெண்ணிக்கையைப் பற்றிக் குறிப்பிடுகின்றபொழுது 'தேவர்க்கு முனிவர்க்குங் காவ லரசர்க்கு, நூறு' என்று சொல்கின்றது. இதன்படி நூறுசெய்யுட்களைக் கொண்டிருக்கவேண்டிய இக்கலம்பகத்தில், ஐம்பத்தொரு செய்யுட்கள் மறைந்திருக்கக் கூடுமென்று கருத வேண்டியதிருக்கிறது.

கலப்பு—அகம் என்ற இரண்டு சொற்களும் கூடிக் கலம்பகம் என்றாகிப் பாவும் பாவினமுமாகிய கலப்புடன் அகமும் புறமுமாகிய கலப்புங்கூடி அமைந்திருப்பது இப்பிரபந்தம். இதற்குரிய உறுப்புக்களுள் அகத்திணை பற்றியன சிலவும் உள்ளன. அவற்றுள் 'ஆளுடைய பிள்ளையாரிடத்துக் காதல் கொண்ட நங்கையொருத்தி அவளது கிளியை நோக்கி அப்பெருமானது புகழைச் சொல்லும்படி வேண்டும்' பொருளையுடையது மேற்கண்ட பாடல்.

நமக்கு இனியவரென்று நம்மால் தெளியப்பட்டவர்களிடத்தில் நமக்கு விருப்பம் நிகழும். அவ்விருப்பம் அவர்பால் அன்பாக நின்று நம்மை அவரிடம் ஈடுபடுத்தும். இவ்வன்பு முதலில் தாய்தந்தையரிடமாகப் பொருந்தி நின்று பின்னர் ஆணின் மனைவியிடத்தும் பெண்ணின் கணவனிடத்துமாய் உறுதிப்படும். உலகியலில் கணவன்-மனைவியாது அன்பே மற்றவற்றைவிடச்சிறந்ததாக இருப்பதென்பதை நாம் நன்றாக அறிவோம்.

கணவனிடத்து உண்மையன்பு கொண்ட மனைவிக்கு அவனை நினைத்தலும், அவனைப்பற்றிப்பேசுதலும், கேட்டலும், அவனுக்குப் பணிவிடை செய்தலுமாதியவற்றிற் போலப் பிறிதெவற்றிலும் பிரியம் நிகழமாட்டாது. இல்வாழ்க்கையில் பெண்மக்கள் கடைப் பிடிக்க வேண்டியநல்லறம்,கணவன்வழியொழுகுதலொன்றேயாம். 'கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை' என்ற ஔவையார் திரு

வாக்கு இங்கே நினைவுகூரத்தக்க தாகும்.

அவ்வாறு கணவனது சொல் வழியே ஒழுகும் காரிகையாரது அன்புநிலையை மூவகைப்படுத்தி அவனது பெயர்கேட்டவுடன் வசமழிவார் தலையன்புடையா ரெனவும் அவனைக் கண்டவுடன் வசமழிவார் இடையன்புடையா ரெனவும், அவனைக் கூடினவு டன் வசமழிவார் கடையன்பு டையாரெனவும் கூறுவர். இவ் வாறே ஆண்டவனது பெயர் கேட்டவுடன் வசமழிபவர், அவ னைக் கண்டவுடன் வசமழிபவர் அவனைக் கூடியவுடன் வசமழி பவர் எனப் பக்குவான்மாக்கள் மூவகைப்படுவர்.

இவருள் தலையன்புடையாரது வசமழிதல்நிலையையே 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள், மூர்த்தி அவனிருக்கும் வண் ணம் கேட்டாள், பின்னை அவ னுடைய ஆரூர் கேட்டாள், பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்' என்ற திருத்தாண்டகம் குறிப்பிடுகின்றது, நாயகனது பெயர் கேட்டவுடன் வசமழியும் இயல்புடைய நாயகிக்கு அவ னைக் காண்டல் கூடல்கள் நிகழ்ந்தவழி உண்டாகும் அன் புப்பெருக்கத்தை அளவிட்டு ரைக்க முடியாதல்லவா?

கணவன் பெயரை மனைவி தன்வாயாற் சொல்லுதல் தமிழ் நாட்டு மரபன்று. எனவே, அவன் பெயரைப் பிறர் சொல் லக் கேட்டு மகிழுகின்றவாய்ப் புத்தான் அவளுக்கு உண்டு. இந்நாளிலும் தந்தை பெயரை மைந்தரின் மழலைச்சொல்லிற் கேட்டு மகிழுகின்ற தாயர் பலரை நாம் காண்கின்றோம். கணவனைக் கூடிப் புதல்வ ரைப்பெற்ற தாயருக்கு மக்க ளின் வழியாக மணாளனின் பெயர் கேட்டுமகிழ இடமுண்டு. கணவனைப் பற்றிப் பிறர்சொல்ல அறிந்த அளவிலேயே நின்று, அவனைக் காணலும் கூடலும் நிகழப்பெறாத காரிகையார், குழ லினும் யாழினும் இனியதான தமது மக்களின் மழலை இனிமை யிற் கலந்த தமது மணவாளர் பெயரைக்கேட்க வழியேது? ஆகவே இல்லிசைவாப்பருவத்தை யுடைய இளங்கன்னியர்கள் அவர்களது அன்பில் வளரு கின்றகிளிப்பிள்ளைகளிடம்கொழு நர் பெயரைக்கூறும்படி வேண்டி, அவைகள் சொல்லக் கேட்டு இன்புறுவார்கள்.

(12ம். பக்கம் பார்க்க )

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

சைவம் எக்காலத்திலும் அப்படியிருந்ததில்லை. காட்டுமிராண்டி வணக்கமும் சாத்திரத்திற் கிழ்ப்படியாகக் கொள்ளப்பட்டிருப்பதை அவர் தெரிக. இனி, அவரே 'இடைக்காலத்தில் சமயம் மக்களின்வாழ்வோடு வாழ்வாகக் கலக்காதகாரணத்தால்தான் சமய உணர்ச்சி மக்களிடம் குறைபட்டது. மீண்டும் அது புத்துணர்ச்சி பெற வேண்டுமானல் மக்களின் வாழ்வோடு வாழ்வாகக் கலக்கவேண்டும். அதற்காகத்தான் இலக்கியங்கள் உண்டாகின' (28-2-54 தினமணி) என்கிருர். சமயம் இடைக்காலத்து மக்களின் வாழ்வோடு வாழ்வாகக் கலத்தற்கு இலக்கியங்களின் துணை அவசியமென்ருல், சங்ககாலத்து மக்களின் வாழ்வோடு வாழ்வாகக் கலத்தற்கும் அத்துணை அவசியமே. அப்போது துணைபுரிந்த இலக்கியங்கள்தான் அவ்வேத சிவாகமங்கள்.

இடைக்காலத்தில் தமிழ்ப் புலவருக்குச் சம்ஸ்கிருதப் பயிற்சி குறைந்தது, இல்லாமற்போயிற் றென்றுகூடச் சொல்லிவிடலாம். அதனுல் அம்மொழிச் செல்வமாகிய மந்திர, தர்க்கங்களும்-அவற்ருல் நிர்ணயிக்கப்பட்ட சைவ சமயமும் அவரிடமிருந்துவிடை பெறலாயின; அவரும் ஏனைத் தமிழரும் எடுப்பார்கைப் பிள்ளைகளாயினர்; சமண பௌத்தங்கள் தமிழகத்தை விழுங்கிக் கொண்டன. அவ்வுண்மை'வெகு சீக்கிரத்தில் ஜைனசமயம் மேம்பட்டு வருவதாயிற்று. அரசர்களாலும், மக்களாலும் பெரிதும் போற்றப்படும் நிலையை எய்தியது. இதற்குரிய காரணங்கள் பல. இவர்கள் மந்திரசக்தியிலும், தர்க்கத்திலும் சிறந்து விளங்கினர்கள். ஆகவே மற்ற வைதிகமதத்தை எளிதில் வெற்றிகொண்டனர். அரசர்களும்---இவர்கள் செய்து வந்த தர்க்கத்தைக்கண்டு பிரமித்து, இவர்கள் சமயமே உயர்ந்தது என்ற முடிவுக்கு வந்தனர். நாட்டுமக்களும் இவர்களுடைய ஒழுக்கத்தையும்,----செய்யுட்களையும் பார்த்து, இவர்கள் சமயம் சிறந்ததுதான் என்று கண்ட

னர். கி-பி 7 ஆம் நூற்றுண்டில் ஞானசம்பந்தரும் அப்பரும் விளங்கிவந்த காலத்தில் சமண சமயத்தின் நிலை இவ்வாருக இருந்தது' எனத் தினமணிக் கதிரில், இலக்கிய மண்டபம் என்ற கட்டுரையில், பண்டைத் தமிழ்நாடும் சமயமும் என்ற தலைப்பில் எஸ். வையாபுரிப் பிள்ளை கூறுவதாலும் அறியப் படும். சைனத்துக்குக் கூறியது பௌத்தத்துக்கு மாகும். இந்த நிலையில் தமிழிலும் பிரபல சைவநூல்கள் உளவாதல் அவசியமாயிற்று, தேவார திருவாசகாதிகளுங் கிடைத்தன. இக்கருத்தைச் 'சங்க காலத்திற் குப்பிறகுதான் சமயம் மக்களிடம் தளர்ச்சி கண்டது. எது குறைவு கண்டதோ அதனை நிறைவேற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டது. மக்களிடம் குறைந்துகிடந்த சமய உணர்ச்சியைச் சரிப்படுத்துவதற்காகத்தான் இடைக்காலத்தில் அதிகமான சமயநூல்கள் உண்டாகத் தொடங்கின' (28-2-54 தினமணி) எனக் கூறி ஏற்கிருர் நவீனரும். பாரத தேசமுழுவதற்கும் சம்ஸ்கிருதம்போற் சைவமும் பொதுவானது. பல துறைகளிற் பரிபாஷைகள் (Technical terms) இருப்ப தியல்பு. சமயத்துறை அதற்கு விலக்கன்று. ஆனல் சைவசமய பரிபாஷைகளனைத்தும் சம்ஸ்கிருதம். ஆயினும் எந்தப் பிரதேச மொழியிலுள்ள சைவ நூல்களிலும் அச்சொற்களோ, தொடர்களோ எடுத்தாளப்படுவது தள்ளப் படாத தொன்று. ஆகலின் தமிழ்ச் சைவ நூல்களிலும் அவை எடுத்தாளப்பட்டன. அவற்றை நிராகரித்தால் தமிழ்ச் சைவர் நஷ்டமடைவர். அவற்றைத் தமிழிற் பெயர்த்துக் கொள்ளலாமெனின், அது போதாது. அவற்றிற் பயிற்சியிருக்கு மளவிற்கு வேதசிவாகம நறுமணத்தையாவது ஏற்கமுடியும். சைவ நூல்களை நுணுகியாராய்வார் அவ்விலாபத்தை யுணர்வர். தமிழ இசுலாமியரும் சமயவிஷயத்தில் அரபுமொழிக் குரானிலுள்ள பல பரிபாஷைகளிற் பயின்று மேம்படுவதை இன்றுங் காணலாம். மேலும் சிவபிரானுக்குரிய நாமங்களிற் பல சம்ஸ்கிருதம். சம்ஸ்கிருதம் என்ற காரணத்தால் அவற்றை விட்டுவிடுவது சைவப்புத்தியன்று. ஆனல் நவீனர் அக்கலப்பால் தமிழ் கெட்டுவிட்டதென்கிருர். அவரிடம் சைவப் பற்றில்லை. அதுதான் அவர் அப்படிச் சொல்லக் காரணம்.

(10ம் பக்கம் பார்க்க)

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல் எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

**மன்மத மார்கழி 21**

## சங்க இலக்கிய ஆங்கில —: மொழிபெயர்ப்பு :—

அணிமையில் அண்ணுமலைநக ரில் நடைபெற்ற அனைத்திந்தியக் கீழ்த்திசை மாநாட்டின் பொதுக் குழு, சங்க இலக்கியங்களை விமரி சனக் குறிப்புகளுடன் பதிப்பிக்க வேண்டுமென்றும், ரோமன் எழுத் துக்களில் அவைகள் எழுதப்பெறல் வேண்டுமென்றும், அவற்றிற்கு ஆங்கிலமொழிபெயர்ப்புச் செய்ய வேண்டுமென்றும் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தை வேண்டிக் கொண்டிருக்கின்றது.

கற்றேன்றி மண் தோன்ருக் காலத்தே வாளோடு முற்றேன்றி மூத்த குடியினராய், மற்றை நாட்ட வரனைவரும் நாகரீகம் என்பதே இன்னதென்றறியாது பிற உயிர்த் தொகுதிகளைப்போல வாழ்க்கை நடத்தி வந்த அந்நாளில் பண்பாட் டிற்கும் நாகரீகத்திற்கும் எடுத்துக்காட்டாயிலங்கியவர் தமிழ ரென்று மார்தட்டிப் பேசுகின்றேம் நாம். அவ்வாறு துணிந்து சொல்லு வதற்குச் சான்ருக இறந்தொழிந் தன போக எஞ்சியுள்ளன சில இலக்கியங்களே. அவை தாமும் தமிழ்ப்பற்றுடையார்போல நடித் துத் தமிழை வளர்ப்பதற்கெனத் தோன்றியவர் தாமேயென நினைத் துக்கொண்டிருக்கும் ஒரு சிலரால் புறக்கணித்து ஒதுக்கப்பெறுகின்ற நிலை தமிழ்நாட்டில் உள்ளதென் பது வெட்கக்கேடான ஒன்ருகும்.

இந்தவேளையில் தமிழர்களின் தனிப்பெருஞ் செல்வமாகத் திகழுகின்ற சங்க இலக்கியத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து உலகெங்கணும் பரவச்செய்ய வேண்டுமென்ற கருத்து, பன்மொழி வல்லுநரும் மேற்கு வங்காள மேல் சபைத் தலைவருமான டாக்டர் சுநீதி குமார் சட்டர்ஜீஅவர்களுக்கு உண்டானதுபற்றி நாம் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம்.

அக்கூட்டத்தில் இக் கருத்தை ஆதரித்துப் பேசியவர்கள், பூனாவிலுள்ள டெக்கான் கல்லூரி ஆராய்ச்சியாளர் டாக்டர் மெகந்தேல் ஜலந்தரைச் சேர்ந்த திரு, ஒய். டி. அகுஜா ஆகியோராவர். தமிழ்நாட்டில் பிறந்து தமிழ்வாழ வாழுகின்றவர்களில் சங்க இலக்கியங்களை நன்ருகப் படித்தவர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் அருகிக்கொண்டு வருகிறது.

டாக்டர் சட்டர்ஜீ 'சங்க இலக்கியத்தின் மதிப்பை வட இந்திய மக்கள் உணராதது துரதிஷ்டமாகும்' என்றும் இந்திய இலக்கியத்திற்குத் தமிழ்மொழி அளித்துள்ள இத்தகைய கருவூலங்களை அனைவரும் அறிந்து கொள்ளக்கூடிய வாய்ப்பை ஏற்படுத்த வேண்டுமென்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

நமது அருஞ் செல்வங்களின் மதிப்பை மற்றமொழி அறிஞர்கள் அறிந்து சொல்லியபிறகாவது நம் நாட்டில் அவைகளின் சிறப்பு அறியப்பெற்று போற்றப் பெறுமானுல் அது நமக்கு நல்லதுதான். இது நிற்க; சங்க இலக்கியங்கள் சரியான மொழிபெயர்ப்பைப் பெற்று மற்றை மக்களுக்கு வளம் கொடுக்கும் நன்னாளை விரைவில் நாம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். வெளிவருகின்ற மொழிபெயர்ப்பும் மூலநூலின் ஏற்றத்திலிருந்து குறையுருதிருக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறோம்.

---

இதனை இதனால்
இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்

:-குறள்

(7ம் பக்கத்தொடர்ச்சி)

தமிழுக்குச் சைவாசிரியன்மார் செய்த உபகாரம் அளப்பரிது. தனித்தமிழ் விருப்பினராகிய நவீனர் அவ்வுபகாரத்தில் இம்மியானும் அம்மொழிக்குச் செய்யவில்லை, செய்யவு மாட்டார். அன்றியும் அவரெழுத்திலும் பேச்சிலுமுள்ள தனித்தமிழ் தமிழுக்குக் கேடாகவுமுடியும். எப்படி? தனித்தமிழ் நூல்களே பெருகித் தமிழகம் அவற்றையே பயின்று அவற்றிலேயே பற்றுக்கொள்ளவேண்டுமென்பது அவருக்காசை. எதிர்காலத்தில் அது நிறைவேறுமென வைத்துக்கொள்ளலாம். இதுவரை வந்துள்ள பலதமிழ் நூல்களில் பல சம்ஸ்கிருதச் சொற்கள் கிடக்கின்றன. அவற்றிற்கு எதிர்காலத்தில் பொருள் தெரிய முடியாது. அவை இறந்துபடும். படவே, அந்நூல்களின் கதி என்னும்? திருக்குறளை யெடுத்துக் கொள்க. அதில் ஆதிபகவன், உலகு, மனம், குணம், அமிழ்தம், பூசனை, தானம், தவம், கணம், தெய்வம், மங்கலம், சமன், சோகாப்பர், பாவி, வித்தகர், ஆசை, காரணம், கோடி, காமுறுதல், நாமம், கருமம், அதிதேயம், ஆசாரம், மணி, பாக்கியம், யாமம், முகம் முதலாகப் பல சம்ஸ்கிருதச்சொற்கள் வருகின்றன. எதிர்காலத்தில் அத்தனையும் வழக்கிழந்தால் அந்நூல் சீவிக்குமா? மாட்டாது. அப்படி அழிந்துபடும் நூல்கள் பலவாதலறிக, இன்னும் பல கேடுகள் உள. மற்றொன்று விரித்தல் என்னுங் குற்றம் வருமேயென்றஞ்சி அவற்றை இங்கே விடுகிறேன். ஆகவே தனித்தமிழ் விருப்பம் தமிழுக்கு ஆக்கமே அளியாதென்பது திண்ணம். தமிழ்ப்பெரு நூல்களைக் கொன்றொழிப்பதற்கே அவ் விருப்பம் புறப்பட்டிருக்கிறது. அதனால் பெரிதும் பாதிக்கப் படுவன சைவத்தமிழ்நூல்களே. சைவசமூகம் அதை உணருமா?

மேலும் அவ்விருப்பினர் 'ஒருமொழி பேசும் மக்களிடம் வேற்றுமொழியாளர் செல்வாக்குடன் தங்கிவாழும்பொழுது அவர் தம் சொற்களும் இலக்கிய இலக்கணவழக்காறுகளும்பிறவும் அவர்கள் தங்கியுள்ள நாட்டில் கலத்தல்இயல்பு' (14-8-55தமிழ்நாடு) என்கிறார். அக்கலப்பு இயல்பாயின் அதை யாராலும் தடுக்க முடியாது.

(தொடரும்)



## வழக்கைத் திரும்பப் பெற்றார்.

காரைக்குடி சன 2-

இந்நகர் நகரசபைத் தலைவர் திரு, அருணாசலம் செட்டியார் தேர்தலில் வெற்றிபெற்றதை எதிர்த்துத் தேர்தல் செல்லுபடியாகத் தக்கதில்லை எனப் பொதுவுடைமைக் கட்சியைச் சார்ந்த திரு கருப்பஞ் செட்டியார் தேவகோட்டையிலிருக்கும் மத்திய நீதிமன்றத்தில் பதிவுசெய்திருந்த வழக்கைத் திரும்பப் பெற்றுக்கொண்டுள்ளார். படத்தில் உள்ளநகரசபைத் தலைவர்வெற்றிபெற்றார்.

## படித்தோம்!

பன்னிரு திருமுறை மன்றம் முதலாண்டுவிழா மலர்:- வெளியீடு-2 மதுரை தெற்காடிவீதியில் உள்ள இம்மன்றத்தின் திருப்பணிகளையும் நோக்கங்களையும் இம்மலர் அறிவிக்கின்றது. ஆலவாய்த் தலக் குறிப்புகளும் திருமுறைத் திருப்பாடல்களிற் சிலவும் இதில் இடம்பெற்றுள்ளன.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் வாழ்க்கை வரலாறு:- ஷிமன்ற வெளியீடு-1 நற்குண நற்செயல்களனைத்திற்கும் எடுத்துக்காட்டாயிலங்குகின்ற ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களை அனைவரும் அறிந்து நலமுற இதுஓர் வழிகாட்டியாயிருக்கின்றது.

## தங்கம், வெள்ளி

மதுரை சன 3-

| | | |
|---|---|---|
| பாட்லா | 95 | 0 0 |
| சவரன் | 62 | 0 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 62 | 0 0 |
| வெள்ளி 100 தோலா | 177 | 0 0 |
| வெள்ளி 1 தோலா | 1 | 12 6 |

(5ம் பக்கத்தொடர்ச்சி)

இதனை 'சிறையாரும் மடக் கிளியே............பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே' என்ற பிள்ளையார் திருவாக்கு அறிவிக்கின்றது. பிள்ளையாரது திருவாக்குகளில் பெரிதும் ஈடுபட்டு அவரை ஞானாசாரியராகக் கொண்டிருந்த நம்பிகள், அத்திருவாக்கைப் பின்பற்றியே மேற்கண்ட பாடலை ஆக்கியுள்ளாரென்பது அறியத் தக்கதாகும்.

காட்டகத்துக் கிளிகள் பேச்சுப்பயிற்சி பெறாதவை. கூட்டகத்துக் கிளிகளில் கொச்சையாகப் பேசுபவையும் உள. அவற்றிற் பிரிந்த இனிய சொல்லும் இளமை வளமும் உடையதொரு கிளி இங்கே தலைவியால் வேண்டப்பெறுகிறது. கணவனது ஆற்றலும் அழகுமே மனைவியால் பெரிதும் விரும்பப் பெறுவனவாதலின், அவ்விரண்டையும் நினைவுகூர்ந்து கிளிக்கு அறிமுகப்படுத்துகிறாள் தலைவி.

மதுரைப் பதிக்கு எழுந்தருளி வந்த பிள்ளையாரை அந்நகரத்து மக்கள் கண்டசெய்தியை அறிவிக்கின்ற சேக்கிழார் பெருமான் 'கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்' என்று கூறியருளினார். இவ்வுண்மையை நிலைநாட்டுவது, அவர் யாழ்மூரிப்பண்பாடியசெய்தி. இசைக் களஞ்சியமாயிலங்கிய யாழ்ப்பாணர் யாழிலிட்டிசைக்க முடியாதபடி மிஞ்சியது யாழ்மூரிப் பண். அப்பண்ணை இசைத்தருளிய பிள்ளையாரது ஆற்றலையும் பேரழகையும் இரண்டாவது மூன்றாவது வரிகளில் பாராட்டி, அவரது புகழை ஓதுகின்றவரும் கேட்கின்றவரும் ஒப்புயர்வற்ற நல்லின்பத்தை அடைவரென்னும் உண்மையை நான்காவது ஐந்தாவது வரிகளிற் புலப்படுத்தும் தலைவிகூற்றாகிய இச்செய்யுள், அவளது தலையன்புடைமையைத் தெளியவுணர்த்திக் கொண்டிருக்கின்றதல்லவா?

## சந்தா நேயர்களுக்கு!

ஐயன்மீர்!

கடந்த புரட்டாசி வரையுள்ள தங்கள் சந்தாப்பாக்கிகளை அனுப்பித்தரும்படி 10-10-55ல் கார்டுகள் எழுதியும், அதன் பின்னர் நமது இதழ்மூலம் பல தடவைகள் வேண்டிக்கொண்டும் ஒரு சிலர் அனுப்பாமலேயே இருந்து வருகிறார்கள். மீண்டும் மீண்டும் அஞ்சல்செலவிற்கு இடம் வைக்காமல்பாக்கிகளை அனுப்பித்தரும்படிகேட்டுக் கொள்கிறோம்.

அன்புள்ள,
அமைச்சர்

## திருப்புத்தூர் நீதிபதிக்குப் புதிய அதிகாரம்

திருப்புத்தூர் டிச 31-
திருப்புத்தூர் நீதிமன்றத்தின் நீதிபதி திரு, ஏ விசுவநாதனுக்கு ரூ 200வரை அபராதம் விதிக்கத்தான் இதுவரை அதிகாரமிருந்தது. ஆனுல்1-1-1956 முதல் ரூ 500வரை அபராதம் விதிக்கலாம் எனச் சென்னை உயர் நீதிமன்றம் அதிகாரம் கொடுத்துள்ளதாகத் தெரிகிறது.

## நன்கொடை ரூ *1500*

தாய்நாட்டில் சமீபத்தில் ஏற்பட்ட புயல், வெள்ளத்தினுல் பாதிக்கப்பட்டுள்ளோருக்கு, நிவாரணம் அளிக்கும்பொருட்டு 13-12-55உயில் சிங்கப்பூர் நாட்டுக்கோட்டைச் செட்டியார் வர்த்தக சங்கத்தின் மூலம் சென்னை முதன்மந்திரி கே. காமராஜ் நாடார் அவர்களுக்கு ரூ 5001 அனுப்பப்பெற்றுள்ளது.

அத்துடன் மேலும் ரூ 1500 மேற்படி நிவாரண நன்கொடையாக 28-12-55உயில் சென்னை முதன்மந்திரிக்கு அனுப்பப்பெற்றுள்ளது.

## நன்னெறி மன்றம்

ஆதிரை நாளன்று சுசீந்திரத்தில் நாகர்கோவில் நன்னெறி மன்றத்தின் சார்பில் திருவெம்பாவை பசனை சிறப்பாக நடைபெற்றது. அன்று அதிகாலை சீதப்புனலாடி இம்மன்ற அன்பர்கள் ஸ்ரீதாணுமாலய சுவாமி பேரம்பலம் ஸ்ரீ நடராஜப்பெருமான் சந்நிதிகளிலும் சுசீந்தை வீதிகளிலும் வலம்வந்து திருவெம்பாவைப்பாக்களை பன்முறை பாராயணம் பண்ணினுர்கள்.

## ஸ்ரீ காசிமடம் அதிபர்

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் வடஇந்தியாவிலுள்ளபுண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரைசெய்து, ஸ்ரீ காசியிலுள்ள அறச்சாலையைப் பார்வையிட்டு, 23-12-55ல் தங்கள் இருக்கைக்குச் சுகமாக வந்து சேர்ந்தார்கள். அடிக்கடி மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாகப் போற்றிவரும் சுவாமிகள் சற்குருவருளால் அடையப்பெறும் பேறு அளவிடற்கு அரிதாகும்.

தொடர்கதை:

# வாழ்க்கைப் பாதையில்...?

அழ. கருப்பையா

வீட்டிலே பெற்ருேர்கள் கல் யாணம்என்ற ரப்பரால்அழித்து விடுவார்களே? அவள் அழகு வளர்கிறது; நான் அவளிடம் கொண்ட அன்பும் வளர்கிறது. என்று சிந்தித்தவாறே பாலைச் சுவைபார்த்தான் மனேகரன்.

## 25

கண்ணியம், கடமை, கட்டுப் பாடு என்ற கொள்கையுடன் வாழ்வதாகக் காட்டிக்; கள்ளக் கடத்தல் செய்யும் பெருமக்கள் வரிசையில் முன்னிற்பவன் காளி யப்பன் என்பது நாமறிந்த உண்மை.

'லேக்வியூ'வின் அந்தரங்க அறையிலே காளியப்பனும், பம் பாய் கள்ளக்கடத்தல் குழுத்தலை வனும் தங்கக் கடத்தல் சம்பந்த மாகப் பேசிக்கொண்டிருந்தனர். முனியன் தன் காதுகளைக் கூர் மையாக்கி ஜன்னல் வழியாக அவர்கள் பேசுவதைக் கேட்டு அத்தனை செய்திகளையும் சி. ஐ. டி. செல்லத்திற்குத் தெரிவித்து மேலும் துப்பறியத்துவங்கினன்.

பம்பாயிலிருந்து திருச்சிவரை கடத்தப்பட்டுள்ள தங்கத்தைத் திருச்சியிலிருந்து அமாவாசை யன்று கொண்டுவரத் தீர்மானித் தார்கள். முனியன் இச் செய்தி யையும் மேலதிகாரிகளுக்குத் தெரியச்செய்தான். பதவி உயர வேண்டுமே!

அமாவாசை இருட்டு. கண் சிமிட்டும் வானத்து மீன்கள் எங்கு சென்றனவோ? 'வாக் சால்' கார் திருச்சி நோக்கிப் பறந்துகொண்டிருந்தது. இரவுப் பெண்ணைப் பாராட்டி 50, 60 மைல் வேகத்திலே காரின் ஆக்ஸிலேட்டரை அழுத்தினன் காளியப்பன். எதிர்காலத்தின் இன்பத்தை எண்ணி மகிழ்ச்சிக் கடலிலே நீந்திக்கொண்டிருந் தான் காரின் பின்சீட்டிலிருந்த முனியன். கனவுக் கோட்டை சிதைந்துவிட்டால்....என்று ஏங் கிக்கொண்டிருந்தான் பம்பாய் கள்ளக்கடத்தல் குழுத்தலைவன். அந்தக் கருப்பு வாக்ஸாலின் எண்கள் மறைக்கப்பட்டிருந் தன.

தென்றல்தரும் தென்னையின் ஓசையும் சலசலவென ஓடும் காவிரியின் நீரும் திருச்சியின் செழிப்பை எடுத்துக் காட்டின. மலைக்கோட்டையின் உச்சியிலே எரியும் பாதரஸ விளக்கையும் மங்கச்செய்தது அமாவாசை இருட்டு. காவிரிக் கரையின் ஓரத்திலே ஓங்கி வளர்ந்துள்ள தென்னைகளையும் மாமரங்களையும் தாண்டிவந்துகுடிசையொன்றின் அருகிலே கார் நின்றது. காளியப்பன் குடிசைக் கதவைக் கைவிரலால் தட்டினான். 'யார் அது?' என்ற குரல் எழுந்தது குடிசையிலிருந்து.

(தொடரும்)

## மாவட்டக் கழகக் கூட்டம்

மதுரை, டிச 23-

இராமனாதபுரம் மாவட்டக் கழகத்தின் 1955-56ம் ஆண்டிற்கான திருத்தப்பட்ட வரவு-செலவுத் திட்டமும் 56-57ம் ஆண்டிற்கான வரவு—செலவுத் திட்டமும் இன்று காலை 9மணிக்குக் கூடிய மாவட்டக் கழகக் கூட்டத்தில் நிறைவேறின.

கூட்டத்திற்குத் தலைவர் திரு, எஸ். இராமசாமி நாயுடு எம். எல். ஏ. தலைமை வகித்தார்.

இராமநாதபுரம் கழக உறுப்பினர் திரு, அரு. அருணாசலம் செட்டியார் காரைக்குடி நகரசபைக்கு ஏகமனதாகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதற்கு அவரைப்பாராட்டி ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தீர்மானத்தைத் தலைவர் திரு, எஸ். ராமசாமிநாயுடு எம். எல் ஏ. முன்மொழிந்தார்.

திருப்பத்தூர்தாலுகா கரச்சியாபுரத்தில் தமது தாயார் வள்ளியம்மை ஆச்சியின் நினைவாக ஒரு கிராம மருத்துவசாலை ஏற்படுத்த 84செண்ட் நிலமும் கட்டிடம்கட்ட ரூ 5000மும் அதை நிர்வாகிக்க ரூ 10000மும் அளித்து அதை மாவட்டக் கழகத்தார் திறக்குமாறு திரு எஸ் வி என் நாச்சியப்ப செட்டியார் கேட்டுக்கொண்டதைமாவட்டக் கழகம் ஒப்புக்கொண்டது, புதுவயலில் தாய் சேய் நல விடுதி கட்டி முடிந்ததும் அதற்காக 10ஆண்டுகளுக்கு ஆண்டு ஒன்றிற்கு ரூ 1000வீதம் திரு எ மு முத்தப்பசெட்டியார் அளிக்க முன் வந்துள்ளதை ஏற்றுக் கொண்டு அதைப்போர்டு நிர்வாகத்தில் நடத்தத் தீர்மானிக்கப்பெற்றது.

---

## உங்களுக்குத் தெரியுமா?

தசாம்ச முறையை அடிப்படையாகக்கொண்ட புதிய நாணயங்கள் 1957வாக்கில் செலவாணிக்கு வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதுபற்றிச் சீக்கிரத்தில் ஒரு முடிவு செய்யப்படும். தற்போது புழக்கத்தில் இருந்துவருகிற நாணயங்கள், புதிய நாணயங்கள் ஆகிய இரண்டும் சுமார் மூன்று வருஷ காலத்துக்குச் செலாவணியில் இருந்துவரும்; அம்மூன்றுவருஷ காலத்தில், பொது ஜனங்கள் பழைய நாணயங்களைக்கொடுத்துவிட்டுப் புதிய நாணயங்களைப் பெற்றுக்கொள்வதற்குப்போதிய வசதிகள் அளிக்கப்படும்.

பள்ளிக்கூடங்களிலும் இதர கல்வி ஸ்தாபனங்களிலும் காந்தியத் தத்துவம் பற்றிய நூல்களை உபயோகத்துக்குக் கொண்டுவரும் விஷயம் பற்றிப் பரிசீலனை செய்வதற்காக நிறுவப்பட்ட கமிட்டியின் சிபாரிசுகளை நிறைவேற்றிவைப்பது சம்பந்தமாய் இந்திய சர்க்காருக்கு ஆலோசனை கூறுவதற்காக உப-கமிட்டியொன்று இப்பொழுது நியமிக்கபபட்டிருக்கிறது. கல்வி, சத்தியாக்கிரகம் பொருளாதாரம், அரசியல் முதலிய விஷங்கள் பற்றி காந்தி கொண்டிருந்த கருத்துக்களை கல்வி ஸ்தாபனங்களில் உகந்த கட்டங்களில் போதிக்கலாமென்பது அக்கமிட்டி செய்துள்ள முக்கியமான சிபாரிசுகளில் ஒன்றாகும்.

கைவேலைப் பொருள்கள் உற்பத்தித் துறையில் கூட்டுறவுப் பழக்கத்தை வளர்க்கும் பொருட்டு, பொது எம்போரியம்கள் கைவேலைப்பாட்டுப்பொருள்களைத் தனிப்பட்ட வர்த்தகர்களிடம் கொள்முதல் செய்வதைக் கூடியமட்டும் குறைத்துக்கொண்டு, கூட்டுறவு ஸ்தாபனங்களிடமிருந்தே அவற்றைக் கொள்முதல் செய்ய வேண்டுமென்று அகில இந்திய 'மார்க்கெட்டிங்' மகாநாடு சிபாரிசுசெய்திருக்கிறது. இத்துறையில் கூட்டுறவு ஸ்தாபனங்களை ஏற்படுத்துவதற்கான முன்னேற்ட வேலைத் திட்டங்களையும் மகாநாடு சிபாரிசுசெய்திருக்கிறது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

**செட்டிநாடு**

வார இதழ்

மலர்-25 இதழ்-13
மன்மத - மார்கழி 28
12-1-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## பாலை

**தலைமகனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகளுக்கு உணர்த்தி மீண்டு வந்து தலைமகனைத் தொழுது விரைந்து வரும்படி வேண்டி உடன்பட்டுக் கூறியது.**

சேறுஞ் சேறு மென்றலிற் பலபுலந்து, சென்மி னென்றல் யானஞ் சுவலே, செல்லா தீமெனச் செப்பிற் பல்லோர், நிறத்தெறி புன்சொலின் றிறத்தஞ் சுவலே, அதனாற், சென்மின் சென்றுவினை முடிமின் சென்றுங், கவணீ டாத லோம்புமின் யாமத், திழையணி யாகம் வடுக்கொள முயங்கி, யுழையீ ராகவும் பனிப்போ டமியே, குழைவான் கண்ணிடத் தீண்டித் தண்ணென, வாடிய விளமழைப் பின்றை, வாடையுங் கண்டிரோ வந்துநின் றதுவே. 229

*நாம் வினைவயிற் செல்லுவோம் செல்லுவோமென்று நீர் சொல்லுதலால் பலவாகப் புலந்து செல்லுவீராக என்றுசொல்ல யானஞ்சுகிறேன். செல்லாதீர் என்று சொன்னால் பலரும் மார்பிலே யெறிந்த அம்புபோலச் சொல்லும் புன்சொல்லின் திறத்திற்கு அஞ்சுகிறேன். அதனால் செல்லுவீராக. சென்று வினைமுடிப்பீராக. சென்று தங்கிய அவ்விடத்தில் நெடுங்காலம் நிற்றல் ஒழியுமாறு பாதுகாத்துக்கொள்ளுவீராக. நடுயாமத்தில் கலன்கள் அணிந்த மார்பு வடுப்படும்படி முயங்கிப் பக்கத்திலே நீரிருப்பினும் இவள் நடுங்குவாள் தனியேயிருந்து வருந்தும்படி அகலிடமெங்கும் பரவிக் குளிர்ந்து இயங்குகின்ற பெய்து வெளிதாகிய மேகத்தின் பின்னே வந்துநின்ற வாடைக்காற்றையும் கண்டிரல்லவா?*

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

இன்னம்பல பலயோனியி லெய்தாநெறி பெறவே
முன்னம்பல ரடிதேடவு முடிதேடவு மெட்டா
வன்னம்பல பயில்வார்புன லணிதில்லையு ளாடும்
பொன்னம்பல நாதன்கழல் பொற்போடு பணிந்தான்.

:-வில்லிபுத்தூரார் பாரதம். 649

உரை:- 'இன்னம் - இதற்கு மேலும், பல பல யோனியில்- பல பல பிறவிகளில், எய்தா நெறி - பொருந்தாத முத்தி நெறியை, பெற-பெறும்படியாக, முன்னம்-முன்னாளில், பலர்-திருமாலும்பிரமனுமாகியஇருவரும், அடி தேடவும்-பன்றியுருவெடுத்துத் திருவடிகளைத் தேடவும், முடி தேடவும் - அன்னவுருவெடுத்துத் திருமுடியைத் தேடவும், எட்டா-அவ்விருவருக்கும் எட்டாது ஆழ்ந்தும் உயர்ந்தும் நின்ற, அன்னம் பல பயில்-பல அன்னங்கள் உறைகின்ற, வார் புனல்-மிக்க நீரையுடைய, அணி தில்லையுள்-அழகிய தில்லைப்பதியில், ஆடும் - திருநடம் புரிகின்ற, பொன்னம்பல நாதன்-கனக சபேசனது, கழல்-திருவடிகளை, பொற்போடு-முறைப்படி, பணிந்தான்-வணங்கினன்" என்பதாகும்.

உயிர்க்குறுதி பயப்பனவாகிய நூல்களை, வேதாகமபுராணேதிகாசங்களென்று வரிசைப்படுத்திப் பெரியோர் சொல்லுவர். இவையனைத்திலும் சொல்லப் பெற்றுள்ள முடிந்த பொருள் ஒன்றேயென்பது நல்லறிஞர் கண்டறிந்த பேருண்மையாகும். வேதாகமங்களை யுணர்ந்து பெருமுயற்சியில் அறிந்துகொள்ளத் தக்க உண்மைகளைப் புராணேதிகாசங்களின் வாயிலாக எளிதில் அறிந்துகொள்ளலாம்.

இதிகாசங்கள் சிவரகசியமும், பாரதமும், இராமாயணமுமென்று சொல்லப்பெறுவனவாம். இவற்றுள் பாரதம் வியாச

முனிவரால் உரைக்கப்பெற்றது. இதனை முதலில் எழுதியவர் மூத்த பிள்ளையார். அதனால் இதனை ஐந்தாம் வேதமென்று சொல்லுவர். இதனை 'நீடாழி யுலகத்து மறைநாலோ டைந் தென்று நிலைநிற்கவே, வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதஞ்சொன்னநா, ளேடாக மாமேரு வெற்பாக, வங்கூ ரெழுத்தாணிதன், கோடாக வெழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ' என்ற செய்யுளால் அறியலாம். இதிகாசம் என்ற சொல்லுக்கு 'அறமுதலாகிய உறுதிப் பொருள்களை நல்கும் பழைய வரலாற்றைக் கூறுவது' என்பது பொருள்.

பரத வம்சத்து மன்னர்களது சரித்திரத்தைக் கூறுவதால் இந்நூல் பாரதமெனப்பட்டது. பரதனென்பவன் துஷ்யந்த மன்னனுக்குச் சகுந்தலையிடம்தோன்றிச் சகலகலாவல்லவனாய் உலக முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆண்டு ஒப்பற்ற கீர்த்தியுடன் வாழ்ந்தவன். இவன் வம்சத்துப் பிறந்தவர் பலராயினும் அவர்களிற் சிறந்த பாண்டவர்களது வரலாறு கூறும் இந்நூலைப் பாரதமென்று அழைத்தனர். இது வடமொழித் தத்திதாந்த நாமம். தத்திதாந்தமாவது ஒரு சொல்சிறிது வேறுபட்டுத் தன் பொருளையாயினும் தன்னோடியையுடைய பொருளையாயினும்உணர்த்துவதாம்.

விநாயகப் பெருமான் எழுத வேதவியாசர் கூறிய பாரதம் பதினெட்டுப் பருவங்களையுடைய தாய் நூற்றிருபத்தையாயிரம் சுலோகங்களைக்கொண்டுவிளங்குகின்றது. இதனைக்கடைச்சங்கப் புலவருள் ஒருவராகிய பெருந்தேவனார் என்பார், தமிழில் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாக வெண்பாவாலியற்றினார். அவ்வெண்பாவின் தொகை பன்னீராயிரமெனத் தொண்டை மண்டல சதகம் கூறுகின்றது.

அப்பெருந்தேவனார் பாரத வெண்பாவிற்குப் பிறகு வில்லிபுத்தூரர் விருத்தப்பாக்களாலியற்றிய பாரதம் தோன்றியது. இது சுருக்கமாயிருக்கிறதென்று இடையிடையேயுள்ள கதைகளை விரித்து நல்லாப்பிள்ளை யென்பவர் பதினையாயிரத்து முந்நூறு பாடல்களாற் செய்த நூல், நல்லாப்பிள்ளை பாரதம் என்று வழங்கப்பெறுகிறது. வில்லிபுத்தூரர் பாரதப் பாடற்றொகை, நாலாயிரத்து முந்நூற்று முப்பத் தொன்பது ஆகும்.

வில்லிபுத்தூரார், திருமுனைப் பாடி நாட்டிலுள்ள சனியூரில் அந்தணர் குலத்தில் தோன்றிய வர். கல்வி கேள்விகளிற் சிறந்து செந்தமிழ்ப் பாடல்களைச் செவ்வி யுற இயற்றும் ஆற்றலை இவர் பெற்றிருந்தார். சந்தப் பாடல் கள் செய்வதில் தம்மோடு வாதிடவந்த பலரைத் தோல்வி யுறச் செய்து, வக்கபாகையென் னும் நகரத்தில் கொங்கர் குல பதியாய் அரசுபுரிந்து வந்த வரபதியாட்கொண்டானது, நன் மதிப்பைப் பெற்றிருந்தபடி யால், அவ்வாறு தோல்வியுற்ற பாவலர்களின் காதுகளைக் குறும்பி யளவுக்குக் குடைந்து தோண்டி அறுத்து வந்தவரிவ ரென்பதை 'குறும்பி யளவாக் காதைக் குடைந்து தோண்டி: எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை' என்ற பழைய பாடற்பகுதி அறிவிக்கின்றது,

இவர், வைணவ சமயத்தவ ரெனக் கொள்ளுதற்குச் சான்று கள் உளவேனும், சிவபரத்துவக் கருத்திற் சிறிதும் மாறுபாடில் லாதவராகவே யிருந்திருக்கிறு ரென்பதற்குரிய பல சான்றுகளை இந்நூலிலேயே காணலாம். நூலாசிரியர் குமாரராகிய வரந் தருவார் பாடிய சிறப்புப் பாயி ரத்தில் திருமுனைப்பாடி நாட்டை 'தேவரு மறையு மின் னமுங் காணுச் செஞ்சடைக் கடவுளைப் பாடி, யாவரு மதித் தோர் மூவரி லிருவர் பிறந்தநா டிந்தநன் ளுடு' என்றுகூறி, அப் பர் பெருமானையும் வன்றொண் டப் பெருந்தகையையும் நினைவுக் குக்கொண்டுவருவது இங்கே சிந்திக்கத்தக்கதாகும்.

சிவபரத்துவ நிருபணம் செய் கின்ற பாரதப்பாடல்கள் பல வற்றுள் மேற்கண்ட பாடல் தலைசிறந்ததாகும். பாண்டவரில் நடுவுள்ளவனுகிய அருச்சுனன், பாஞ்சால மன்னன் மகளாகிய திரௌபதியைச் சுழலுகின்ற எந்திரத் திகிரி நாப்பண் நிலை யிலா இலக்கை யெய்து உரிமை யாக்கிக் கொண்டான். உரிமை கொண்ட பாஞ்சாலியுடன் அன்னையாகிய குந்திதேவி யிருந்த குயவர் வீட்டிற்குவந்து பாண்டவர்கள் 'இன்று பெற் றன மோரையம் என்செய்வதி தனை'யென்ருர்கள். உள்ளிருந்த அன்னை மைந்தருரைத்த சொல் லைக் கேட்டு 'தேவர் தெள்ளமு தென்ன மக்காள் சேர நீருந் தும்' என்ருள்.

அன்னையின் சொற்படி பாஞ் சாலியை ஐவரும் மணந்தனர், நாரதர் முனிவர் கட்டளைப்படி

அவனை ஓரோராண்டு ஒருவராக மேவவும் ஒருவர் மேவு நாளில் மற்றவர் அவனைக் காணில் ஓராண்டு உருமாறிப் புண்ணியத் துறைகளாடிமீளவும் முடிவு செய்துகொண்டனர். அந்த முடிவுப்படி தருமனுடனிருந்து பொழில்விளையாடிய திரௌபதியை எதிர்பாராத நிலையில் பார்த்துவிட்டான் பார்த்தன். முன்னை முடிவுப்படி தீர்த்த யாத்திரை செய்யவேண்டிய பொறுப்பு அவனுக்கு உண்டாகியது.

கங்கை காளிந்தி முதலாகிய வடநாட்டு நதிகளில் ஆடித் தென்னாட்டிற்கு வந்த அருச்சுனன் திருவேங்கடம், காஞ்சிபுரம், அத்திகிரி, அருணகிரி, திருவெண்ணெய்நல்லூர், திருவதிகை முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு திருத்தில்லையை அடைந்து வழிபட்டான். அவனது தில்லை வழிபாடு இப்பாடலாற் கூறப்பெற்றது.

சிவபெருமானது பரத்துவத் தன்மையைத் தெளிவிக்கும் வரலாறுகள் பலவற்றுள் திருமாலும் பிரமனும் அடிமுடிதேட அவன் அழற்பிழம்பாய் ஆழ்ந்தோங்கிய வரலாறு தலைசிறந்ததாகும். திருமாலடியவர் குடியில் தோன்றிச் சிவபரத்துவ நிருபணஞ் செய்த அரதத்தாசாரிய சுவாமிகளது சுலோக பஞ்சகம் சிவஞான சுவாமிகளால் தமிழில் மொழி பெயர்க்கப்பெற்றுள்ளது. அதில் ஆண்டவனது பரத்துவ உண்மைக்குப் பல சான்றுகள் காட்டப்பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று 'இருவரும் அன்னமும் ஏனமுமாகி, அடிமுடி தேட அழற்பிழம் பாகலின்' என்பதாகும்.

பிரமன், திருமால், உருத்திரன் என்று சொல்லப்பெறுகின்ற மும்மூர்த்திகளுள் ஒருவரெனச் சிவபெருமானைக் கருதுவதனாலேயே, அவரது முழுமுதற்றன்மை புலனாகாமற் போய் விடுகின்றது. மூவராயும் மூவர்க்கு முதல்வனாயும் நிற்பவன் சிவபெருமானென்பதை அடிமுடிதேட நின்ற வரலாறு அறுதியிட்டு அறிவிக்கின்றது.

பிறப்பிறப்பாகிய உழற்சி வினையினால் உண்டாவது. அவ்வுழற்சியிலிருந்து விடுதலைபெற வினையின் நீங்கிய முதல்வனது திருவடிகளையன்றி வேறுதுணையில்லை. பிறக்குந் தெய்வங்களைப் பொருளாகக் கருதுவோர் பிறவியின் துன்பத்தைக்கடத்தல் எங்

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

அச்செல்வாக்குப் போன பிறகும் அக்கலப்புஎளிதிற் போகாது. எந்த மொழியிலும் அஃதப்படித்தான். ஆயினும் அதைப் போக்கவேண்டுமென்பது நியாயமாகலாம். ஆனால் ஒரு மொழியிலுள்ள சிலபல கருத்துக்கள் பிறமொழிகளுக்குக் கொண்டுவரவும்படும். அக்கருத்துக்களோடு அவற்றுக்குரிய அம்மொழிப் பெயர்களுஞ் சேர்ந்து வரும். அச்சொற்களைச் செல்வாக்கினால் வந்தனவென்று சொல்லமுடியாது. அக்கருத்துக்களைத் தம் சொந்தமொழிகளிலாக்கிக்கொண்டு அவற்றின் மூலம் பெயர்களைத் தள்ளிவிட வேண்டுமென்பாரவர். சொந்த மொழிகளில் ஆக்கிக்கொள்வது தவறன்று. மூலப் பெயர்களைத் தள்ளிவிட வேண்டுமென்பது தான் தகாது. ஏன்? ஒருவருடைமையைத் தம்மதாக்குதற்குப் பொய்ப்பத்திரங்களைச் சிருட்டித்தல், உள்ள பத்திரங்களுக்குத் தப்பருத்தங் கூறுதல், அவ்வுள்ள பத்திரங்களையே பொய்யென்றல், கைக்கூலி கொடுத்துக் கள்ளச் சாட்சிகளைத் தயார்செய்தல், சொல்வன்மை மிக்க வக்கில்களைத் தமக்கு நியமித்துக்கொள்ளுதல் முதலிய தீங்குகளைச் செய்யும் வன்கண்ணர் பலர். அதேமாதிரி அயல்மொழியிலிருந்து வந்த அக்கருத்துக்களின் வரலாறு காலக்கிரமத்தில் மறையக் கூடும். பிறகு அவை தத்தம் மொழிகளுக்கே உரியவென அவ்வம் மொழிகளில் வெறிகொண்டார் கூறிச் சாதிப்பர். அம்மட்டோ? அவை எந்த மொழியிலிருந்து வந்தனவோ அந்த மொழிக்கே தத்தம் மொழிகளிலிருந்துதான் போயினவென்று கூறி வாதிக்கவும் சாதிக்கவுந் துணிந்து அதற்கான தீங்குகளைச் செய்வதில் மற்றொருவகை வன்கண்ணராவாரவர். மொழிவெறி அவ்வகையில் எத்தீங்கு செய்யவுங் கூசாது. வரலாற்று நூல்களிற் பல அம்முறையிற்றான் எழுதப் பட்டுக் கிடக்கின்றன. நாட்டில் தரங் கெட்டு மனஸ்தாபம் பெருகுவதற்கு ஏதுவாவன அவையே. ஆகலின் அக்கருத்துக்களின் மூலப்பெயர்களையும் எடுத்தாள

வேண்டும். அம்முகத்தால் அக் கருத்துக்கள் அப் பெயர்களுக் குரிய மொழியிலிருந்து கொள் ளப்பட்டனவென்பதைச் சம்ம தித்தபடியாம். அதற்காகவே தொல்காப்பியர் தம் நூலில் வட சொற்களுக்கு விதிவகுத்து அவ் விதியினூறே அவற்றைத் தமிழ் நூல்களில் வழங்க அனுமதி தந்திருக்கிறுர். தமிழ்நூல்களில் திசைச்சொற்களும்வந்துள்ளன. அதற்குத் திசைகளிலுள்ளா ரின் செல்வாக்குக்காரணமன்று வாணிகம், சமீபம் முதலியவற் றின் தொடர்பால் அவை தமிழ கத்தில் வந்து வழங்கும்; தமிழ் நூல்களிலும் இடம்பெறலாம். அப்போது அதற்கும் விதி வேண்டும். ஆகலின் அவற்றின் வழங்கற் பாட்டிற்கும் அவர் விதி கூறி வைத்தார். அவர் அகத்திய முனிவரின் சீடர், அதனல் சைவ சமய ஞானசீல ராய் விளங்கினுர். அச்சைவ மக ரிஷி அவ்வனுமதி தந்ததன் அவ சியமும், அருமையுந் தெள்ளறி ஞர்க்கே புலனுகும்

அவ்விருப்பினர் 'வடவர் ஆதிக்கமும் வடமொழி யாதிக் கமும் தமிழருடைய சமயத் துறையிலும் சமுதாயத் துறை யிலும் இலக்கியத்துறையிலும் பல நூற்றுண்டுசள் நுழைந்து நிலைத்த காரணத்தால் பழந் தமிழ்ச்சொற்கள் பல பேச்சு வழக்கிலும் நூல்வழக்கிலும் பயன்படுத்துவார் இன்றி இறந்துபட்டன. இங்ஙனம் இறந்துபட்ட சொற்கள் கணக் கில. இன்று தமிழன் பேசும் ஒவ்வொரு அயற்சொல்லும் ஒரு பழந்தமிழ்ச் சொல்லை வழக் கொழியச் செய்துவிட்டது' (14-8-55 தமிழ்நாடு) என்கி ருர். ஆதிக்கம் பற்றிய பகுதி முன் விசாரிக்கப்பட்டுவிட்டது. தொல்காப்பியரே தமிழுக்கு முதற்பெருங் காவலர், தலையாய பொறுப்புணர்ச்சியுடையவர். அயற் சொற்கள் தமிழிற்கலந்து தமிழ்ச்சொற்களை வழக்கிழக்கச் செய்யுமென்பது உண்மையானுல் அக்கலப்புக்கு மேற்காட்டியபடி அவர் விதி வகுத்திருக்கமாட் டார். ஆகையால் அக்கலப்பு எச் சொல்லையும் வழக்கிழக்கச் செய் யாதென்பது திண்ணம்.

(தொடரும்)

## திருத்தம்

மலர்25, இதழ்11, பக்கம்6, பத்தி2, வரி2இல் உள்ள 'தமிழ் மந்திரம்' என்பதைத் 'தமிழ் மாத்திரம்' என்று திருத்தி வாசிக்க.

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

மன்மத மார்கழி 28

## மின்சாரக் கட்டணம்

தேவகோட்டைக்கும், இதைச் சேர்ந்த பகுதிகளுக்கும் மின்சாரம் வழங்கி வருகின்ற ஸ்ரீ மீனுட்சி எலக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷன் லிமிடேட் கம்பெனியின் டைரக்டர்கள் கூட்டம், அணிமையில் நடைபெற்றபோது, வரும் பிப்ரவரி மாதத்திலிருந்து யூனிட் ஒன்றுக்கு $1\frac{1}{2}$ அணு உயர்த்தி வசூலிப்பதென்று முடிவு செய்திருக்கிருர்கள்.

இதுவரை 0-4-6 அணுவாக இருந்ததை இனி 0-6-0 அணுவாக உயர்த்த வேண்டியதற்குப் புயலால் ஏற்பட்ட நஷ்டத்தை அவர்கள் காரணமாகக் கூறியுள்ளார்கள். புயலால் உண்டாகிய நஷ்டம் கார்ப்பரேஷனை மட்டும் பாதிக்கவில்லை யேன்பது அவர்கள் அறியாததல்ல. நூற்றுக்குத் தொண்ணூற்றைன்பதுபேர் பெருஞ் செல்வர் முதல் சாதாரண மக்கள்வரை அனைவரும் புயலின் கொடுமைக்கு ஆளாகித்தான் இருக்கிருர்கள்.

விளக்கெண்ணெய் விளக்குகளிலேயே விழித்துக் கண்ணொளியுடன் வாழ்ந்த காலம் போய்ப் பேரொளியுடைய விளக்குகளில் விழித்துக் கண்கெட்டுக் கொண்டிருக்கிற இந்நாளில் மின்சாரத் தேவை, இன்றியமையாததாக ஆகிவிட்டது. எளிய வாழ்க்கை வாழ்பவர்களும்கூட மின்சார

உதவியை நாடியே இங்கு வாழு கின்றூர்கள்.

புயலின் கொடுமையால் வந்த நஷ்டத்தை ஈடுசெய்துகொள்ளமுடியாமல் தாற்காலீக மராமத்துச் செய்து கொண்டிருப்பவர் பலர் என்பதை யாவரும் அறிவர். ஏழைகளிற் பலர் வீடுகட்டிக் கொள்வதற்காக அரசியலார் வழங்கிய 30 ரூபாயையும் பெற்றுப், பழய கடனுக்குக் கொடுத்துவிட்டு,வாடகை வீடுகளில் இருந்துவருகிறூர்களென்பது கண்கூடான உண்மையாகும்.

இந்த வேளையில் மின்சாரக் கட்டணத்தை மூன்றில் ஒரு பங்கு உயர்த்த வேண்டுமென்று கம்பெனியார் முடிவு செய்திருப்பது பெரிதும் வருத்தந்தருகின்றதொரு செய்தியாகும். கம்பேனிக்குப் புயலால் உண்டாகிய நஷ்டத்தைக்கம்பெனியின் காப்பு நிதியிலிருந்து ஈடுசெய்துகொள்ள அரசியலாரின் அநுமதிபெற்று அவ்வாறு செய்வதுதான் நேர்மையும் முறையும் ஆகுமேயன்றி ஏற்கனவே நஷ்டத்திற் பங்கு பெற்றிருக்கின்ற பொதுமக்கள் தலையில், கம்பெனி நஷ்டத்தையும் சுமத்தக்கருதுவது தக்கதாகமாட்டாது.

**31-12-55**ல் கூடிய நம்நகர் நகரசபைக் கூட்டத்தில் அவ்வாறு கட்டணத்தை உயர்த்துவது நகர மக்களைப்பாதிக்குமாதலால்இதைக் கைவிடும்படி ஷை கம்பெனியாரை யும், இதற்கு அநுமதிக்கலாகாதென்று அரசியலாரையும் கேட்டுக் கொண்டு ஒரு தீர்மானம் நிறைவேறியுள்ளது.

இத்தீர்மானத்தை நாம் பெரிதும் வரவேற்றுக் கம்பெனியின் டைரக்டர்கள் இதுபற்றி மீண்டு ஆலோசித்துத் தங்கள் முடிவை மாற்றிக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேம்.

## நன்கொடை

*கும்பகோணம் ஸ்ரீ ஆதிகும்பேசுவரசுவாமிக்கு வெள்ளியில் நாகாபரணம்செய்து சாத்த ரூ 500 திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் நன்கொடை யளித்துள்ளார்கள்*

## தேதிப்படங்கள் வரப்பெற்றோம்

தேவகோட்டை நடுபஜார் ரோடு பவுன் ஆபரணமாளிகை ந. நா. நந்தகோபாலன் செட்டியார் வெளியிட்ட ஆங்கிலம்-தமிழ்தேதி-திதி, நட்சத்திர யோகம் விசேடநாட்கள்காட்டும் தினத் தேதிப்படம்.

சென்னை நெல்சன் & கம்பெனியார் வெளியிட்ட மாதத் தேதிப்படம்.

---

## அன்னம்பாலிப்பு நடத்த ரூ. 20 ஆயிரம்

சிதம்பரம் சன. 5-

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள், திருவள்ளுவர், சேக்கிழார் இருவர்களின் நினைவாக அன்னம்பாலிப்பு நடந்து வருவதற்காக ரூபாய் 20ஆயிரம் நிதி வழங்கியுள்ளார்கள். மேற்படி நிதியின் ஆண்டு வருவாயிலிருந்து பிரதி ஆண்டு மாசிமாதம் உத்திர நட்சத்திரத்தன்று மயிலாப்பூரி லுள்ள திருவள்ளுவர் கோயிலிலும், பிரதிஆண்டு வைகாசி மாதம் பூச நட்சத்திரத்தன்று குன்றத்தூர் சேக்கிழார் கோயிலிலும் அன்னம்பாலிப்புகள் நடைபெற்றுவரும். ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் இதுவரையில் சுமார் ரூ 40லட்சம் நிதி வழங்கியிருக்கின்றார்கள். இதில் சுமார் 20லட்சம் ரூபாய் அன்னம்பாலிப்பிற்காகவே நிதிவழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கது.

---

## இந்துக்களாயினர்

மதுரை சன. 4-

ஒட்டன்சத்திரத்திற்கும் தாராபுரத்திற்கும் இடையேயுள்ள பெருமாள்கோவில்வலசு என்ற இடத்தில் மதுரைஆதீன இளவரசு சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகளிடம் திரு, தி. பாண்டியன், திருமதி பகவதிஅம்மாள், திரு. வெ. பெருமாள் மாதாரி உட்பட 76 கிறித்தவர்கள் தீட்சைபெற்று மீண்டும் இந்துக்களானார்கள்.

---

## பாரதி விழா

கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் பாரதிவிழா 25, 26தேதிகளில் தேசிய உயர் நிலைப்பள்ளி மண்டபத்தில் கொண்டாடப்பட்டது. சுமார் 900 ரூபாய்க்குப் புதிய நூல்கள் வாங்கப்பட்டன. செட்டி நாட்டின் சிறந்த தமிழ்ச் செல்வரான ராஜா சர் முத்தையச்செட்டியார் அவர்கள் சங்கத்தின் வளர்ச்சிக்காக ரூ 300 மதிப்புள்ள அண்ணுமலைப் பல்கலைக் கழக நூல்களும், ரூ 200 பணமும் அனுப்பினர்கள். தில்லையின் எல்லையில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தை நிறுவிய செட்டி நாட்டரசர் அண்ணுமலைச் செட்டியார் அவர்களின் திருவுருவப்படத்தைத் தொழில் பிரமுகர் எஸ். சி, ராய் திறந்து வைத்துப் பாராட்டினர். பிரபல வழக்கறிஞர் கே. பி. கைத்தான் விழாவைத் துவக்கிவைத்துப் பேசுகையில் 'மகான் அரவிந்தரைப்போல் மகாகவி பாரதியார்' தேசியகவியும் தீர்க்கதரிசியும் ஆவார் என்று குறிப்பிட்டார்.

உபஜனுதிபதி ராதாகிருஷ்ணன்! ஆதியோரிடமிருந்து வந்திருந்த வாழ்த்துக்களைச் செயலாளர் குப்புஸ்வாமி வாசித்தார்.

தமிழ்நாட்டிலிருந்து பிரதம விருந்தினராக வந்திருந்த 'சிவாஜி' ஆசிரியர் திரு லோக சீதாராம் 'பாஞ்சாலிசபதம்' 'அகங்கார விலாஸம்' 'அடிவானத்திற்கப்பால்' பாரதிக்குப் பின் வந்த கவிஞர்கள்' மற்றும் பல தலைப்புகளில் சுமார் ஒரு வாரம் சொற்பொழிவாற்றினர். திருச்சி எழுத்தாளர் சங்கத்தின் செயலாளர் திரு வி எஸ் ராகவன், சிறுகதை ஆசிரியர் 'மாயா' புதுதில்லி வானெலிநிலையத்தைச்சேர்ந்த ஸ்ரீ சுந்தா, ஸ்ரீ தேபேஷ்தாஸ் ஐ ஸி எஸ் மற்றும்பலர் விழாவில் கலந்து கொண்டனர்.

விழாவில் சிறுவர் சிறுமியரின் கதம்ப நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

செயலாளர் எஸ்.குப்புஸ்வாமி நன்றிகூறினர்.

## தங்கம், வெள்ளி

| | மதுரை | சன 9 |
|---|---|---|
| பாட்லா | 96 | 0 0 |
| சவரன் | 62 | ·0 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 61 | 0 0 |
| வெள்ளி 100தோலா | 178 | 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 12 6 |

(5ம் பக்கத்தொடர்ச்சி)
னம் கூடும்? இதை நினைந்து தான் 'மேலும்பல பிறப்புக்களை அடையாமை யாகிய பயனைக் கருதிப் பொன்னம்பலநாதன் கழலைப் பணிந்தான்' என்று ஆசிரியர் கூறினர்.

இங்கே கூறப்பெற்ற யோனியில் எய்தாநெறியே மணிவாசகப் பெருந்தகையாரால் 'மீண்டு வாரா நெறி' என்று குறிக்கப் பெற்றது. என்றும் அழியாததாகிய பேரின்பப் பேற்றைவழங்குவதற்குச் சிவபெருமானெருவனே தலைவன். ஏனைய திருமாலும் பிரமனுமுதலியோர் அவனருளுக்கே காத்து நிற்பவர் சிவபெருமானை வணங்கினலன்றிப் பிறவிப்பிணி தீரமாட்டாது' என்னும் முடிந்த உண்மைகளை ஆசிரியர் இப்பாடலின் வாயிலாகத் தெளிவுபடுத்தியுள்ளார்.

## அதிகாரிகள் மாற்றம்

சென்னை சன 6-

பழனியில் தற்சமயம்சுகாதார அதிகாரியாக உள்ள டாக்டர் எ.சுப்பையா தேவகோட்டைக்கு மாற்றப்பட்டிருக்கிறர்.

தேவகோட்டை நகரிலுள்ள சுகாதார அதிகாரி திரு, என். மகாலிங்கம் விருதுநகருக்கு மாற்றப்பட்டுள்ளார்.

## நோட்டீஸ்

சிவகங்கை டி. மு. கோர்ட்டு

1955 ஷ S. C, 441

வெள்ளச்சாமிசெட்டியார்–வாதி

சிலோனைச் சேர்ந்த மசாக்குலை எஸ்டேட்டிலிருக்கும் அயிலி மெய்யன் அம்பலம் மகன் மெய்யன் அம்பலம் —1-ம் பிரதிவாதி

ஷெ பிரதிவாதிக்கு:-

வாதிக்கு 1ம் பிரதிவாதியும் வில்லான் அம்பலமும் 8-5-51ல் ரூ 255க்கு எழுதிக்கொடுத்த புரோநோட்டின் அசல் வட்டி ரூ 312-5-1யும் வரப்பற்று வாதி வியாஜ்யம் செய்துஷெ சூட்டும் 16-1-1956உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. 1ம் பிரதிவாதிக்கு ஆக்ஷேபணையிருந்தால் ஷெ உயில் ஷெகோர்ட்டில் பகல் 10 மணிக்கு ஆஜராகித் தெரிவித்துக்கொள்ளவும்.

R. S. சேஷாத்திரி அய்யர்

சிவகங்கை } வாதி அட்வகேட்
4-1-56

தொடர்கதை:

# வாழ்க்கைப் பாதையில்...?

அழ. கருப்பையா

'நண்பன்' என்ருன் காளியப்பன். குடிசையின் கதவு திறந்தது. கையில் சிறு பையுடன் கரிய உடையணிந்த உருவம் ஒன்று வெளியே வந்தது. பையைக் கையில் வாங்கிக்கொண்டான். மீண்டும் கார், காவிரிக் கரையின் அமைதியைக் கலேத்துக்கொண்டு புறப்பட்டது.

கருங்கும் என்ற இருட்டிலே தனியாகக் காற்று வீசுதல்போலத் திருச்சியிலிருந்து புதுக்கோட்டை வரும் கன்னங்கரிய தார்ரோட்டிலே கடும்புயலெனக் காளியப்பனின் கார் பறந்து கொண்டிருந்தது. விளக்கில்லாமலே இவ்வளவு வேகம் வருவதென்ருல் அவனுடைய சக்தியையும் திறமையையும் வியக்கத் தானே வேண்டும்!

கிரனூரை யடுத்து மலேயும், காடும் நிறைந்த பயங்கரமான வழி குறுக்கிடும். அவ்விடத்தை நெருங்கியதும் முனியனின் உள்ளத்திலே துடிப்பு ஏற்பட்டது. காளியப்பனின் கைகள் அவனேயுமறியாமல் நடுங்கின. முகத்திலே மட்டும் மகிழ்ச்சி காணப்பட்டது. அணேயப் போகும் ஜோதி சுடர் விட்டுத் தானே பிரகாசிக்கும்! தூங்கிக் கொண்டிருக்கும் குழுத் தலேவனுக்குத் தென்றலிலே மிதக்கும் இளங்கொடிபோலக் கார்போய்க் கொண்டிருப்பதாகத் தோன்றியது.

எதிர்பாராத விதமாகக் காரின் முன்சக்கரங்களில் ஒன்று பெரும் சப்தத்தோடு வெடித்தது. குழுத்தலேவன் அலறிக் கொண்டு எழுந்தான். காளியப்பன் தோல்பையைக் கையில் எடுத்துக்கொண்டு, 'டேய்! முனியா. டயரை எடு, ஜாக்கியைக் கொண்டுவா' என்று அலறினுன். முனியனே அசையாமல் சிலேபோல் நின்ருன்,

'டேய் முனியா! உன்னேத் தாண்டா' என்ருன் காளியப்பன். முனியன் சிரித்துக் கொண்டே காரின் பின் பகுதிக்குச் சென்ருன். காளியப்பன்

கைப்பையுடன் புதருள் சென்று மறைந்தான். பாதையைச் சுற்றி விளக்குகளின் ஒளி தோன்றி யது. இதைக்கண்ட குழுத் தலை வன் கண்களை ஒருமுறை ஓட விட்டான். காளியப்பனைக் காணவில்லைவெளிச்சம்நெருங்கிக் கொண்டேவந்தது. இனித் தப்ப வழியைப்பார்க்க வேண்டுமென் றெண்ணி ஓட முனைந்தான். உடனே முனியன் அவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டான். குழுத்தலைவன் மடியிலிருந்த துப்பாக்கியை எடுத்தான். 'முனியா! உயிர்மேல் ஆசை இருந்தால்-வாழவழி வேண்டு மானல் என்னை விட்டுவிடு' என்று கத்தினன்.

'உயிரினும் கடமையே பெரிது. ஆயிரம் ஆண்டு வாழ் வதைவிடக் கடமைக்காகப் போராடி வெற்றிகண்டு அரை மணிநேரம் வாழ்ந்தாலும் போதும். இனி நீ தப்ப முடி யாது. கம்பிகளை எண்ணிக் கொண்டு காலம்தள்ள வேண்டி யதுதான்' என்றான் முனியன்.

குழுத்தலைவன் துப்பாக்கியின் விசையை அழுத்தினன். குறி தவறியது. அருகிலிருந்த புதரி லிருந்து, 'ஐயோ! செத்தேன்' என்ற குரல் எழுந்தது.

செல்லம் குழுவினர் காரை நெருங்கினர். முனியனின் கை களுக்கிடையே திமிறிக்கொண் டிருந்த குழுத் தலைவனின் கை யில் விலங்கை மாட்டினர். செல் லமும் முனியனும் சத்தம் வந்த புதரை நோக்கிச் சென்றனர். 'ஆ! இவனா!!' என்றனர் இருவ ரும் ஒரே சமயத்தில்.

## கல்கத்தா

டிச. 31, ஜனவரி 1 தேதிக ளில் பாரதி தமிழ்ச் சங்கத்தில் திருப்பாவை - திருவெம்பாவை ஆறங்கவிழா நடைபெற்றது. திரு, ஓ. சு. வே. மணியம் வர வேற்றார். அப்போது ஆங்கிலத் தில் 'மிஸ்டிசிஸம்' என்றழைக் கப்படும் 'சன்மார்க்கநெறி' பற்றி தேஷ்பந்து கல்லூரி முதல்வர் ஜிதீஷதாஸ், ஆர். என். சிங், தேசிய நிலையத்தைச் சேர்ந்த பி. எஸ். கேசவன், திரு லோகசீதாராம், திருமதி திருவேணிசிங், ஹிராலால் சோப்ரா, பி. எஸ். வரதாராசன், என். ஆர். கோபாலகிருஷ்ண, வேதாந்த சுப்பிரமணியம் ஆகி யோர் பல்வேறு இந்திய மொழி களில் உள்ள கருத்துக்களைச் சொற்பொழிவுமூலம் விளக்கி னார்கள்.

செயலாளர் எஸ். குப்புசாமி நன்றி கூறினர்.

## தெரிந்து கொள்ளுங்கள்

இந்தியாவில் விளையாட்டுக்களை அபிவிருத்தி செய்வதற்காகவும் ஊக்குவிப்பதற்காகவும், அகில இந்திய விளையாட்டுகள் கௌன்சில் பயிற்சியளிக்கும் திட்டங்களை ஆரம்பித்திருக்கிறது. கிரிக்கெட், சடுகுடு ஆகிய விளையாட்டுகளில் பயிற்சியளிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன; மல்யுத்தம், கால்பந்து, ஹாக்கி முதலிய விளையாட்டுகளிலும் பயிற்சியளிக்கும் விஷயம் பரிசீலனையில் இருந்து வருகிறது.

இப்பொழுது டில்லியில் நடைபெற்று வருகிற இந்தியக் கைத்தொழில்கள் கண்காட்சியைப் பார்ப்பதற்காக டில்லிக்குப்போக விரும்புகிற தொழில்துறை சிப்பந்திகளுக்கு இந்திய ரயில்வேக்களில் சலுகைகள் அளிக்கப்படுகின்றன. 30பேருக்குக் குறையாமல் கோஷ்டியாக மூன்றாவது வகுப்பில் பிரயாணம் செய்பவர்களுக்குமட்டுமே இந்தச் சலுகைகள் அளிக்கப்படும்.

புதிதாகக் கல்வி பயின்றுள்ள வயதுவந்தோருக்கான சிறந்த புத்தகங்களுக்குப் போட்டிப் பரிசுகள் வழங்குவதற்காக மத்திய சர்க்கார் கல்விமந்திரி காரியாலயத்தினர் இதுவரை ரூ 32,383 செலவு செய்துள்ளனர். அடுத்த போட்டிக்காக ஒரு லக்ஷம் ரூபாய் ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கிறது.

1954ம் வருஷத்தில் இந்தியாவுக்கு வந்த வெளிநாட்டு உல்லாசப் பிரயாணிகள் எண்ணிக்கை 39,333; 1951ல் இந்த எண்ணிக்கை 20,000.

தொழிலாளர்களுக்கான ராஜாங்க இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தின்படி இப்பொழுது தொழிற்சாலை வேலையாட்கள் சுமார் 10லக்ஷம் பேர் நன்மை அடைந்துவருகிறார்கள்.

1955 செப்டம்பரில் இந்திய யூனியனில் கடல், தரைச் சுங்கவரி மொத்தம் ரூ 14.16 கோடி வசூலிக்கப்பட்டது; இதேமாதத்தில் சென்றவருஷம் வசூலான தொகை ரூ 13.02கோடி.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-14
மன்மத - தை-6
19-1-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## மருதம்

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் வாயில் வேண்டிச் சென்றானைத் தோழி வெகுண்டு கூறியது.

முயப்பிடிச் செவியி னன்ன பாசடைக், கயக்கணக் கோக்கின் கூம்பு முகை யன்ன, கணைக்கா லாம்ப லமிழ்துநாறு தண்போது, குணக்குத் தோன்று வெள்ளியி னிருள்கெட விரியுங், கயற்கணங் கலித்த பொய்கை யூர, முனிவில் பரத்தையை யெற்றுறந் தருளாய், நனிபுலம் பலைத்த வேலை நீங்கப், புதுவறங் கூர்ந்த செறுவிற் றண்ணெென, மலிபுனல் பரத்தந் தாஅங், கினிதே தெய்யநிற் காணுங் காலே. 230

:-ஆலங்குடி வங்கனார்

நெருங்கிய பிடியானையின் காதுபோன்ற பசிய இலையையும் குளத்திலே யுள்ள அழகிய கொக்குப்போலக் கூம்பிய முகையையும் அவற்றிற்கேற்பத் திரண்ட தண்டையுமுடைய ஆம்பலினது அமிழ்து நாறும் மெல்லிய பூ, கிழக்கே தோன்றுகின்ற வெள்ளியைப்போல இருள் கெடும்படி மலருகின்ற கயல்மீன் கூட்டம் மிகுந்த பொய்கையையுடைய ஊரனே! என்னைக் கைவிட்டுவிட்டுச் சினங் கொள்ளாதிருக்கின்ற பரத்தையைத் தலையளி செய்வாயாக. கோடையால் மிகத்துன்பப்பட்ட பொழுது அக்கோடை வெப்பம் நீங்கும்படி புதிதாக வற்றக் காய்ந்து வெடித்த வயலில் குளிர்ச்சி பொருந்த நிறைந்த தண்ணீர் பரவினாற்போல நின்னைக் காணும்போதெல்லாம் இனிமையாகவே இருக்கின்றது.:-பாலகவி




# குரு வழிபாடு

செல்வி, வயிநாகரம்
இராம. மீனுட்சி

திருவாவடுதுறை ஆதீன முதற் குரவராகிய ஸ்ரீ நமசிவாய தேசிக மூர்த்திகளது குருபூசைவிழாவையொட்டி நடைபெற்றமூன்ருவது திருமந்திர மாநாட்டில் 11-1-56ல் பேசியது.

அண்ணல் ஆலவாய், நண்ணினுன்றனை, எண்ணியேதொழத் திண்ண மின்பமே. தேசார் துறைசை திகழ்சுப் பிரமணிய ஆசான்ருள் சென்னிக் கணி.

சிவநெறிச் செல்வர்களே! செல்விகளே! வணக்கம். நெற்றிக்கண்ணேயும் நீலகண்டத்தையும் கரந்து நம்மனேர் உய்ய, நம்போன்ற மானிட வடிவந்தாங்கி இங்கே எழுந்தருளியிருக்கின்ற நமது மகாசந்நிதானம் அவர்கள் "குருவழிபாடு" என்ற பொருள் பற்றிப் பேசும்படி அடியேனுக்கு ஆணை தந்தார்கள். அவர்களது கருணேநோக்கம் பெற்ற அடியேனுக்கு அவையடக்கம் எதுவும் வேண்டுவதில்லையென்ற இறுமாப்புடன் பேசுதற்கு முற்படுகின்றேன்.

"தந்தைதாய் ஆவானும் சார்கதி இங்கு ஆவானும், அந்தமிலா இன்பம் நமக்கு ஆவானும், எந்தமுயிர், தானுகுவானுஞ் சரணுகுவானு மருட், கோனுகுவானும் குரு" என்பது ஆன்ருேர் திருவாக்கு.

உலகத்திலே வாழுகின்ற உயிர்த் தொகுதிகள் அனைத்திலும் மனிதன் சிறந்தவனென்று மதிக்கப் பெறுகின்ருன். அவ்வாறு மதிக்கப்பெறுதற்குரிய

காரணங்களைப் பலரும் பலவாறு கக்கூறுவர். அவற்றிலெல்லாம் தலையாயதாய்ப் பிறர் எவராலும் அறிந்து சொல்லப்பெறாததாயிருக்கின்றதொரு காரணத்தை நம் முன்னோர் நமக்கு அறிவுறுத்தியுள்ளனர்.

உயிர்களனைத்தும் புலனுணர்வால் உண்டாகின்ற ஐவகை அறிவு வரையுமே யுடையன என்றும், மனிதன் ஆறாவது அறிவாகிய பகுத்தறிவை யுடைமையால் அவன் உயர்ந்தவனென்றும், பலர் கூற நாம் கேட்கிறோம். இதை ஓரளவான உண்மையென்பதன்றி முற்ற முடிந்த உண்மையென்று சொல்ல முடியாது.

நல்லன தீயன வற்றைப் பகுத்தறியும் அறிவு விலங்கு பறவை முதலிய சிலவற்றிற்கு இயல்பாகவே இருப்பதையும், மனிதரிற் சிலருக்கு அது இல்லாதிருப்பதையும் நாம் கண்கூடாகக் காண்கின்றோம். ஆகவே பகுத்தறியும் ஆற்றல் பெற்றிருப்பதொன்றே மனிதஇனத்தின் உயர்வுக்குக் காரணமானது என்று முடிவு கட்டுவதற்கில்லை. பின்னை எதனால் மனிதன் சிறந்தவனாகின்றானென்றால் நித்தியா நித்திய விவேகம் என்று சொல்லப்பெறுகின்ற நிலைமை நிலையாமைஅறிவு அவனுக்கு உண்டாகத்தக்க வாய்ப்பு இருப்பதனாலேயேயாம்.

காணப்பெறுகின்ற இவ்வுலகத்தில் உயிர்களாகிய நாமிருக்கிறோம். நமது உயிருக்குயிராயிருந்து நம்மை இயங்கவைக்கின்ற இறைவன் இருக்கின்றான். உலகமும், உயிரும், இறைவனுமாகிய மூன்று பொருள்களுள், உயிருக்குயிராய் உள்ளே மறைந்து நிற்கின்ற இறைவனை எளிதில் உணர்ந்துகொள்ள முடியாமையால் காணப்பெறுகின்ற உலகமே கதியெனநினைந்து அதனையே உண்மைப் பொருளாக மதித்துப் பிறப்பிறப்பாகிய பெருஞ்சுழிப் பட்டுக் கலங்குகின்றவர்களையே பெரும்பாலாகக் காண்கின்றோம்.

பொருள்களின் உண்மைஇயல்புகளை அறிந்து கொள்ளுவதற்குத் துணையாய் இருப்பது கல்வியறிவு. கற்கவேண்டிய நூல்கள் உலகியல்பற்றியனவும்இறையியல் பற்றியனவுமென இரு திறத்தில் உள்ளன. இறையியலைப் பற்றி அறிந்து கொள்ளுதற்கு உலகியலறிவு துணைசெய்யும். உலகியலறிவு அதனளவிலேயே அமைந்துவிடுவதனால் கற்றவர்களில் ஒரு சிலர்

கவினுடையவராகக் கருதப்பெறு கின்றாரில்லை.

அறியாமையில் அழுந்தி ஆணவத்தோடு அத்துவிதமாகச் சடம்போற் கிடந்த உயிரின் அறிவு விளக்கம்பெற்று, அவ்வுயிர் நற்பேறுபெறுதல் குறித்தே ஆண்டவன் அதற்குத் தனு கரண புவன போகங்களை அருளினான். அந்த நியதிக்கு மாறாக உயிர்களின் போக்கு நிகழுமேல் அது ஆண்டவனுடைய கட்டளைக்கு முரண்பட்டதேயாகும்.

மனிதனுக்கு உடலைத் தந்த தாயும், அறிவாகிய உயிரை நல்கிய தந்தையும். அவ்வறிவு விளக்கத்திற்கு அடிப்படையான உபதேசத்தை வழங்கிய குருவும் அவர்கள் அவற்றைத் தருவதற்கு மூலகாரணமாயிருந்த தெய்வத்திற்கு ஒப்பாகப் பாராட்டப்பெறுவார்கள். இம்மூவருள், உடல் உயிராகிய இரண்டையும் வழங்கிய பெற்றோரைவிட மெய்யுணர்வை அருளிய குருமூர்த்தி பன்மடங்கிற் சிறந்தவராவார். ஏனெனில் மனித இனத்துப் பெற்றோரைப்போல மற்ற இனத்துப் பெற்றோரும் உடலுயிரைக் கொடுப்பது காணப் பெறுவதனாலேயேயாம்.

பிறவிதோறும் தாய் தந்தையரைப் பெற்றுப் பேறுகின்ற உயிர், புண்ணிய முதிர்ச்சியால் சற்குருவின் கருணையையடைந்து பிறவாநெறி கூடப் பெறும். அதனாலேயே அன்னை தந்தையரை அளவிட்டுரைக்க முடியாதென்று கூறிய நம் சமயம், 'மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர், வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே' என்றும் கூறியது.

குருமூர்த்திகளாகிய ஆசிரியர்களை நூலாசிரியர், உரையாசிரியர், போதாகாசிரியர், ஞானாசிரியர் என நால்வகைப்படுத்திக் கூறுவர். இவருள் முன்னையிருவரைக் கருவிகளாகக் கொண்டு பின்னையிருவரும் அறிவு விளக்கத்தை ஆக்குவார்கள். போதகாசிரியரை உலகியலுணர்த்துபவரெனவும் ஞானாசிரியரை இறையியலுணர்த்துபவரெனவும் கொள்ளுதல் வேண்டும். ஞானாசிரியரது நல்லுதவிக்குப் போதகாசிரியரது உதவி அடிப்படையாயிருந்து உபகாரம்செய்யும். இதனாலேயே 'எழுத்தறிவித்தவன் இறைவனாகும்' என்று வெற்றிவேற்கை கூறியது.

'எழுத்தறியத் திருமிழி தகைமை தீர்ந்தான், மொழித்

திறத்தின் முட்டறுப்பா ளுகும். மொழித்திறத்தின், முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளு ணர்ந்து, கட்டறுத்து வீடு பெறும், என்பது பரிமேலழக ரது உரைப்பகுதியில் கண்ட பாடல். இதுகொண்டு எழுத்தறி வாற் பெறவேண்டிய முடிந்த பயன், என்றும் அழியாததாகிய வீடுபேற்றைப் பெறுவதே என் பதை யறியலாம்.

நில்லாததாகிய உலகத்திலி ருந்து விடுதலைபெற்று நிலைத்த தாகிய வீடுபேற்றை அடைவதற் குக் குரு மூர்த்தியினது கரு ணையே சாதனமாயிருப்பதா கும். ஆண்டவனுடைய திருவ டிப் பேற்றை அடைவதற்கு, அப்பெருமானது திருவரு ளொன்றே துணையாயிருப்பதா தலின் அத்திருவருளை வழங்கு கின்ற ஆசாரியன் ஆண்டவனே யென்று ஞானநூல்கள் கூறின.

சிவஞானபோத எட்டாஞ் சூத்திரம் இவ்வுண்மையைத் தெளிவுபடுத்திக் கூறுகின்றது. 'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத், தம்முதல் குருவு மாய்த்தவத்தினில் உணர்த்த விட், டன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே' என்பது அது.

உயிர்வர்க்கம், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படும். இவருள் விஞ் ஞானகலர் ஆணவமென்னும் ஒரு மலமட்டும் உடையவர். பிரளயாகலர் ஆணவமும் கன்ம முமாகிய இருமலங்களையுமுடைய வர். சகலர் அவற்றோடு மாயா மலமுடைய நம்மனையவர். இவ ருள் விஞ்ஞானகலருக்கு இறை வன் அறிவுக்கறிவாய் உண் ணின்று உணர்த்தி மல நீக்கம் செய்வான். பிரளயாகலருக்கு மான், மழு முதலியவை தரித்த உருவத்திருமேனி கொண்டு எழுந்தருளிவந்து அருள் செய் வான். சகலராகிய நம்போன் ருர்க்கு நம்மைப்போன்றமானிட வடிவந்தாங்கிக் குருமூர்த்தியாய் எழுந்தருளிவந்து தீட்சை செய்து மலங்கெடுத்துச் சிவப் பேற்றை வழங்குவான்.

இதனையே, 'களிம்பறுத் தானெங்கள் கண்ணுதல் நந்தி, களிம்பறுத் தானருட் கண் விழிப்பித்து' என்று திருமந்தி ரம் கூறியது. உயிர்களை அநா தியே பற்றிநிற்கின்ற ஆணவமல மாகிய களிம்பை நீக்கிப் பரிசுத்த மாந் தன்மையடையச் செய் கின்ற குருமூர்த்தியைச் சிவ பெருமானெனவே தேறி வழி படுதல் வேண்டுமெனச் சைவ

சமய நெறி கூறியது. தேசிகர் தம்மைச் சிவனேசர் தம்மையும், ஈசனெனவே யுளத்துணவு' என்பது அது. இதற்கு உரையெழுதிய யாழ்ப்பாணத்து ஆறுமுகநாவலரவர்கள் 'சிவாகமத்தில் விதிக்கப்பட்ட சமஸ்கார தீட்சையினலே வாகீசுவர வாகீசுவரி களிடத்துத் தோன்றினமையால் அவர்களை மானிடர்களெனக் கருதலாகாதென்க. சமயிகளை நிந்தித்தவன் பிரமதினம் பதினைந்து செல்லும்வரையும் நரகத்திற்கிடப்பன். சாதகரை நிந்தித்தவன் உருத்திர தினம் மூன்று செல்லும் வரையும் நரகத்திற் கிடப்பன். ஆசாரியரை நிந்தித்தவன் சதாக்கிய தத்துவ வருடம் மூன்றுசெல்லும்வரையும் நரகத்தில் கிடப்பன். சாதகருள் நைட்டிகனைப் பிரம்பொருளென்றும் சந்நியாசியைத்தெட்சிணமூர்த்தி என்றும் வானப்பிரத்தனை உருத்திரனென்றும் இல்வாழ்வானை மகேசுவரனென்றும் ஏனையரைப் பொதுவிற் சிவனென்றும் வழிபடுக' என்று குறிப்பிட்டிருக்கின்றார்கள்.

குருமூர்த்தியினது திருமேனியைக் காண்பதும், அவரது திருவார்த்தைகளைக் கேட்பதும், அவருடைய திருப்பெயரை ஓதுவதும், அவரது உருவத்தைச் சிந்தித்தலுமாகிய இவை தெளிவைத் தருவன என்பதைத் 'தெளிவு குருவின் திருமேனிகாண்டல், தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல், தெளிவு குருவின் திருநாமம் செப்பல், தெளிவு குரு ரூபம் சிந்தித்தல் தானே' என்ற திருப்பாசுரத்தில் திருமூலநாயனர் அறிவிக்கின்றார்.

குருமூர்த்தியைச் சிவமூர்த்தியாகக்கொண்டு மனமொழிமெய்களால் வழிபடுவோர் சித்திமுத்திகளைப் பெறுவாரென்பது ஆன்றோர்கள் அநுபவத்தில் கண்டு கூறிய உண்மையாகும். சீகண்ட பரமகுரவரது ஞானபாரம்பரையில்வந்த நமது நமசிவாய குருமூர்த்திகளது நல்விழாவில் குருமகாசந்நிதானம் அவர்கள் அடியேனையும் அருளுக்கு இலக்காகும்படி செய்த பெருங் கருணைக்குப் பெரிதும் மகிழ்ந்து அவர்களது திருவடிகளை வாழ்த்திவணங்கி, உங்கள் அனைவருக்கும் எனது வணக்கங்கூறி இம்மட்டில் அமைகின்றேன்.

நலம்பெருகுக.

## இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் சென்னை

31-12-55 முடிய உள்ள ஒரு ஆண்டுக்குப் பாங்கின் நிகர வருமானம் செலவு முதலியன கழித்து முந்திய ஆண்டிலிருந்து கொண்டுவந்தது ரூபாய் 2,15,839-1-5ம் சேர்த்து ரூபாய் 18,71,564-3-11 ஆகும். இதில் 7,50,000 ரூபாயை வரியின்பொருட்டும் 4,00,000 ரூபாயைக் காப்புநிதிக்கும் 1,25,000 ரூபாயைச் சிப்பந்திகள்போனசுக்கும் 3,68265 ரூபாயைப் பங்குதார்களுக்கு $7\frac{1}{2}$ சதவிகித டிவிடெண்டு வழங்குவதற்கும் 2,28,299-3-11ரூபாயை அடுத்த ஆண்டுக் கணக்குக்குக்கொண்டு போவதற்கும் டைரக்டர்கள் சிபார்சு செய்துள்ளார்கள்.

## திருப்போரூர்

ஸ்ரீகந்தசாமி ஆலய ஆதீன பரம்பரை தர்ம கர்த்தத்துவம் பன்னிரண்டாவது பட்டம் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சண்முகசுவாமிகள், மயிலம் ஸ்ரீலஸ்ரீ சிவஞானபாலய சுவாமிகளின் பூர்வாச்சிரம இளைய புதல்வர் வித்துவான் திரு, சிவப்பிரகாச ஐயரவர்களுக்கு 26-1-56 காலை 8-30 மணிக்கு ஸ்ரீலஸ்ரீ சிதம்பரசுவாமிகள் மடாலயத்தில் விசேட தீட்சை செய்வித்து இளவரசுப் பட்டம் அளிப்பார்கள். மாலையில் ஸ்ரீலஸ்ரீ சிவஞானபாலய சுவாமிகள் தலைமையில் பேரறிஞர்களின் சொற்பொழிவுகள் நிகழும்.

## தமிழ்க் கவிஞர்களுக்கு வேண்டுகோள்

இந்திய அரசாங்கத்தைச் சேர்ந்த சாகித்தியஅக்கடமியார் 1954, 1955ஆம் ஆண்டுகளில் வெளிவந்த சிறந்த சில தமிழ்ப் பாடல்களின் தொகுப்பொன்றை வெளியிட முடிவு செய்திருப்பதோடு, அப்பாடல்களைத் தொகுக்கும் பணியை எனக்கு அளித்திருக்கிறார்கள். ஆதலால், 1954, 1955 ஆம் ஆண்டுகளில் பாடல்கள் வெளியிட்டவர்கள், அப்பாடல்களின் பிரதிகளையாவது அப்பாடல்கள் அடங்கிய நூல்களின் பிரதிகளையாவது தயவுசெய்து விரைவில் எனக்கு அனுப்பி உதவ வேண்டுகிறேன்.

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், தமிழ்ப்பேராசிரியர் அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர் 10-1-1956

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத தை - 6

# நமசிவாய மூர்த்திகள்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவிய ஞானதானப் பெருவள்ளல் நமசிவாய மூர்த்திகள், மெய்கண்ட சந்தானத்தின் ஏழாவது அருட்குரவராகவும் உமாபதிசிவாசாரிய சுவாமிகளின் ஆன்மார்த்த மூர்த்தியாக விளங்கியதிருச்சிற்றம்பலமுடையாரைப்பரம்பரை முறையிற் பெற்றுப் பூசித்த சிவஞானச் செல்வராகவும் இக்குருமூர்த்திகள் திகழ்ந்தார்கள்.

உமாபதிசிவம் - அருணமச்சிவாயர்-சித்தர் சிவப் பிரகாசர், நமசிவாய மூர்த்திகள் என்றவரிசையில் ஞானபரம்பரை வழி வழியாக வளர்ந்து வந்தது. சுத்தாத்துவித சித்தாந்த சைவப் பெருநெறியை உலகினர்க்கு உணர்த்தி நல்வாழ் வழிக்கத் தோன்றியது திருவாவடுதுறை ஆதீனம்.

மூர்த்தி, தலம், தீர்த்தமென்னும் மூவகைச் சிறப்பும் பொருந்திய திருவாவடுதுறைப்பதி திருமந்திர ஆசிரியராகிய திருமூலதேவநாயனாரது தொடர்பாலும் திருவிசைப்பா ஆசிரியராகிய திருமாளிகைத் தேவரது தொடர்பாலும் பெருமை பெற்றுவிளங்குகின்றது. திருக்கோயிலின் பிராகாரத்து வடமேற்கு மூலையில் திருமூலதேவரும் ஆதீன மடாலயத்தில் நமசிவாய மூர்த்திகள் சந்நிதிக்கு இடப்புறத்தில் திருமாளிகைத் தேவ

ரும் கோயில்கொண்டு எழுந்தருளி யிருக்கின்றார்கள்.

சைவாகமங்களிலுள்ள ஞான பாதப் பொருளுண்மையைத் தெளிவுபெற உணர்த்தும் செந்தமிழ்நூல் சிவஞானபோதம். தென்முகக்கடவுள் வலது கைச் சின் முத்திரையால் சொல்லாமற் சொல்லுகின்ற பொருளை, அவரது இடது கையிலுள்ள சிவஞானபோதம் தெளிவிக்கின்றது என்று பெரியோர் கூறுவர். அத்தகைய பெருஞ்சிறப்பு வாய்ந்த சிவஞானபோத நெறியே, இவ்வாதீன அநுட்டான நெறியென்பது அறிந்துகொள்ளத் தக்கதாகும்.

சத்திய ஞான தரிசனிகளின் சீடராகிய பரஞ்சோதிமுனிவர், சுவேதவனப் பெருமாளுக்கு ஞானோபதேசம் செய்து தமது ஞானாசாரியர் பெயராகிய மெய்கண்டார் என்பதை அவருக்குச் சூட்டியது போல, அருணமச்சிவாயரின் சீடராகிய சித்தர் சிவப்பிரகாசர் வைத்தியநாதருக்கு ஞானோபதேசம் செய்து தமது ஞானாசாரியர் பெயராகிய நமசிவாயர் என்பதையே அவருக்குச் சூட்டினாரென்று அறிகின்றோம்.

பஞ்சாக்கர பரமாசாரியரென்று வழங்கப்பெறுகின்ற இக்குருமூர்த்திகளுக்குப்பின்னர் இப்பொழுது இவ்வாதீனத்தின் இருபத்தொன்றாவது குருமூர்த்திகளாக விளங்குபவர்கள் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்ஆவார்கள்.

நூற்றுக்கணக்கான இலக்கண இலக்கிய சாத்திர நூல்கள்தோன்றவும்- வெளிப்படவும்,பெருவாரியான சிவஞானிகளை-புலவர்களைத் தமிழுலகம் பெறவும் வழி வகுத்துத் தந்த-தருகின்ற-தரும் இவ்வாதீனம் நெடிது சிறக்க ஆதீன ஸ்தாபகராகிய பஞ்சாக்கரதேசிக பரமாசாரிய சுவாமிகள் திருவடிகளை அவர்களது குருபூசைத் திருநாளாகிய **20-1-56**ல் மனமொழி மெய்களால் வழிபட்டு வேண்டிக்கொள்வோமாக.

## சென்னையில் 20 கிலோ வாட் நிர்மாணம்

சென்னை அகில இந்திய ரேடியோ நிலையத்தின் 20கிலோ வாட் மத்திய அலை டிரான்ஸ்மிட்டர் ஜனவரி 11-ந் தேதி முதல் இயங்க ஆரம்பித்தது. 1950 ஜூன் மாதம்முதல் ஆரம்பித்து இயங்கிவரும் ஒரு கிலோ வாட் மத்திய அலை ட்ரான்ஸ்மிட்டருக்குப்பதிலாக இப்புதிய மத்திய அலை ட்ரான்ஸ்மீட்டர் வேலைசெய்து வரும்; இதை நிர்மாணிக்க ரூ 8.5 லட்சம் செலவாகியிருக்கிறது; இதனல் ஒலிபரப்பு விஸ்தீர்ணம் பதின் மடங்கு அதிகமாகும். இது ஆவடிக்கு சமீபத்தில் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது; இந்தியாவில் ஒலிபரப்பு வசதிகளை அபிவிருத்தி செய்வதற்காக முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏற்படுத்தப்படும் 15 டிரான்ஸ்மிட்டர்களில் இது ஒன்ருகும்.

---

## முற்போக்குக் கமிட்டி

வெளிநாடுகளில் ரயில்வேக்களின் நிர்வாகம், போக்குவரத்து முதலிய துறைகளில் புதிதாக ஏற்படும் அபிவிருத்திகளைக் கவனித்து வருவதற்காகவும், உள்நாட்டில் நமது ரயில்வேக்களின் வேலைமுறைகள் சம்பந்தப்பட்ட பிரச்னைகளைப்பற்றி ஆராய்ந்து அவற்றுக்கான பரிகாரங்களை ரயில்வே போர்டுக்குச் சமர்ப்பிப்பதற்காகவும் மூவர் கொண்ட நிரந்தரக் கமிட்டியொன்றை ரயில்வே மந்திரி காரியாலயத்தினர் நிறுவியிருக்கின்றனர்.

---

### — நமது நன்றி —

இவ்வாண்டுப் பொங்கல் நன்னளில் நமக்கு வாழ்த்து அனுப்பிய அன்பர்கள் அனைவருக்கும் நமது உளமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். :-ஆசிரியர்

---

### நேயர்களுக்கு!

“சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்” கட்டுரைத் தொடர்ச்சி அடுத்த வாரம் வெளிவரும். :-ஆசிரியர்

## இந்துமத மகாநாடு

மணவாளக்குறிச்சிவிஸ்வகர்ம முத்தாரம்மன் ஆலயத் திருவிழாவை முன்னிட்டு 2-1-56 இரவு நாகர்கோவில் சி. வள்ளிநாயகம்பிள்ளை தலைமையில் இந்துமத மகாநாடு நடைபெற்றது. பாகவதர் திரு, ரத்தின சுவாமிநாடாரின் இறைவணக்கத்துடன் கூட்டம் தொடங்கியது. சுவாமி மதுரானந்தா, திருவாளர்கள் வேலாயுதம் பிள்ளை, ஆறுமுகநாவலர் ஆகியோர் வரவேற்புரை, திறப்புரை, விரிவுரை, ஆற்றினர். தலைவர் பின்னுரைக்குப்பின் திரு ஜி. சிசேகர் நன்றிகூறியதும் மகாநாடு இனிது முடிவுற்றது.

## திருவிடைமருதூர்

திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவிடைமருதூர் ஸ்ரீபிருகத் சுந்தரகுசாம்பிகா சமேத ஸ்ரீ மகாலிங்கேசுவர சுவாமி தைப்பூச மகோத்சவம் நேற்றுக் கொடியேற்றமாகி நடைபெற்று வருகிறது. 22உ இடபவாகனம், 26உ திருத்தேர், 27உ பூச தீர்த்தம் வெள்ளிரதம், 26-1-56 முடிய ஒன்பது நாட்களிலும் மாலை 6-30மணிமுதல் கோயில்பிரசார மண்டபத்தில் ஆதீன வித்துவான்கள், அறிஞர்களது சமயச் சொற்பொழிவுகள் நிகழும்.

## ராயவரம்

திருமயம் தாலுகா திருவெம்பாவை மகாநாடு நகரச் சிவன் கோயிலில் 9-1-56 மாலையில் பாலகவிஇராமநாதன்செட்டியார் தலைமையில் நடைபெற்றது. இராமசந்திரபுரம் சாம்பமூர்த்தி சாஸ்திரிகள் வரவேற்புரை கூறினார்கள். திருவெம்பாவை-திருப்பாவைப் பாடல்கள் பாடிய மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. திருமதி சி. பிருந்தாதேவி, வித்துவான் ஐயன் பெருமாள் கோனர் இருவரும் திருவெம்பாவை, மார்கழிநோன்பு என்பனபற்றிப் பேசினர்கள்.

## மயிலம்

ஸ்ரீவள்ளி தேவசேன சமேத சிவசுப்பிரமணிய சுவாமிக்கு 27-1-56ல் ஆயிரத்தெட்டுச் சங்காபிஷேகமும் தங்க மயில் வாகன மலைவல விழாவும் நடைபெறும்.

---

## குருபூசை விழா

இயற்பகைநாயனூர் குருபூசை நாகர்கோவில் நன்னெறி மன்றத்தின்சார்பில் 25 வது பிரார்த்தனைக் கூட்டமாக 1-1-56ஞாயிற்றுக்கிழமை மாலையில் சுசீந்திரம் திரு சங்கரராமய்யர் இல்லத்தில் நடைபெற்றது. திருமுறை ஓதுதல், தியானம், பசனை, நன்மொழி கேட்டல், மௌனம் ஆகிய நிகழ்ச்சிகள் வழக்கம் போல் நடந்தேறின. நன்மொழி கேட்டல் வேளையில் சுவாமி மதுரானந்தா, திருஞானசம்பந்தத் தம்பிரான், திருவாளர்கள் எஸ். சிதம்பரதாணுபிள்ளை டி. கிருஷ்ணபிள்ளை, தசாவதானம் ப. ஆறுமுகம்பிள்ளை ஆகியோர் பொருள்செறிந்த சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

---

## மூவர் தேவாரப் பரிசு

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் திருவையாற்றில் 'மூவர் தேவாரப் பரிசுநிதி' ரூ. 10 ஆயிரம் வழங்கியிருப்பதின் திட்டத்தின் கீழ் திருவையாறு திரு, சீனிவாசராவ் உயர் நிலைப்பள்ளி 6-ஆவது படிவம் படித்துவரும் குமாரி ஆர். ராதை ரூபாய் 50 பரிசுபெற்றூர்.

## இராமநாதபுரம்

ஸ்ரீ தாயுமான சுவாமிகளின் குருபூசை நாளது 4-2-56 முதல் 6-2-56முடிய மூன்று நாட்கள் நடைபெறும். ஷை தேதிகளில் மடாலயத்தில் மகாபிஷேகம் ஆராதனம், மஹேஸ்வரபூசை, தமிழ்மறைப்பாராயணம், சமயச் சொற்பொழிவுகள், அன்னதானம்வகையரா நடத்த ஸ்ரீ தாயுமானசுவாமி சன்மார்க்க சங்கம் தீர்மானித்திருக்கிறது.

சுவாமிகளின் அன்பர்கள் தங்கள் தங்களால் இயன்ற பொருளுதவிசெய்தும், மஹோற்சவத்தில் கலந்துகொண்டும் சுவாமிகளின் திருவருள் பிரசாதத்தைப் பெற்றுப் போகும்படியும், பொருளுதவி செய்ய முன்வரும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை மணியார்டர்மூலம் இராஜ குமார் ஆர். காசிநாததுரை, தலைவர் ஊருணித்தோற்றம், இராமநாதபுரம் என்ற விலாசத்திற்கு அனுப்பிவைக்க வேணுமாயும் சங்கத்தார் அறிவிக்கின்றனர்.



திருவெண்ணியூர்த் திருப்பதிகங்கள்:- தருமபுர ஆதீன வெளியீடு எண் 357. ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் 5-1-56 மாத ஜன்ம நட்சத்திர நாளில் வெளியிடப்பெற்றது வழக்கம்போல் ஆதீனத்தேவார பாடசாலை ஆசிரியர் வேலாயுத ஓதுவாமூர்த்திகள் தலச்சிறப்பு உரையாதியன எழுதியுள்ளார்கள்,

திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சி:- தருமபுர ஆதினவெளியீடு எண் 358, 31-12-55ல் நிகழ்ந்த ஸ்ரீலஸ்ரீ ஆனந்த பரவச தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூசைவிழா மலர்.

மார்கழி நோன்பு:- மதுரை அட்வகேட் தார்மிக ரத்னப்ரதீப ஸ்ரீ என். ஆர். கிருஷ்ணஸ்வாமி ஐயங்காரவர்கள் எழுதியது. மார்கழித் திங்களின் சிறப்பை முதலில் விவரித்துச், சங்க காலம் முதல் நிகழ்ந்துவருகிற நோன்புண்மையை எடுத்துக்காட்டித், திருப்பாவையின் உள்ளுறை பொருளைத் திறம் பெற விளக்குகிறது இவ்வெளியீடு. திருப்பாவைப் பாடல்களில் முறையே, ஈசுவர சொரூபம், சீவ சொரூபம், உபரோதிசொரூபம், ரட்சகத்துவம், பிரபத்தி, மோட்சப் பிராப்தி ஆகியன சொல்லப் பெற்றுள்ளன என்று இதில் காணும் குறிப்பு இதன் ஆசிரியரின் ஆழ்ந்தகன்ற சம்பிரதாய ஞானத்தைப் புலப்படுத்துகின்றது.

---

## ஸ்ரீ காசிமடம் அதிபர் நன்கொடை

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் நாகர்கோயிலிலுள்ள தென்திருவிதாங்கூர் இந்துக் கல்லூரியில் வழிபாட்டு மண்டபம் கட்டுவதற்காக மேற்படி கல்லூரி அதிபர் திரு, பி. நடராசனுக்கு ரூ. 10ஆயிரத்துக்கு 'செக்' ஒன்று 6-1-56அன்று அனுப்பியுள்ளார்கள்.

---

## உங்களுக்குத் தெரியுமா?

இப்பொழுது மோட்டார்வண்டிகளுக்குத் தேவைப்படும் உதிரி பாகங்களை முறையான வகையில் 16 கம்பெனிகள் தயாரித்து வருகின்றன. இவற்றின் உற்பத்திக்காக மேலும் 11 திட்டங்களுக்கு சர்க்கார் அநுமதியளித்துள்ளனர். எனவே, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகால முடிவுக்குள் மோட்டார் வாகனங்களுக்கு வேண்டிய பாகங்கள், உதிரிப் பொருள்களில் 'பாடி பேனல்'கள் நீங்கலாக, அனேகமாகப் பெரும்பான்மையானவை இந்தியாவிலேயே உற்பத்திசெய்யப்படும்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில், நாட்டில் செவிடர் தொகை பற்றி சாம்பில் சர்வே ஒன்றை நடத்த இந்திய சர்க்கார் உத்தேசித்துள்ளனர். இந்த சர்வேயின் நோக்கம் செவிடர்கள் எத்தனைபேர்கள் இருக்கிறார்கள், இவர்கள்செவிடராய்ப் போனதற்குக் காரணங்கள் யாவை, இப்பொழுதுள்ள செவிடர்களின் தேவைகளென்ன என்பதைநிர்ணயம் செய்வதேயாகும்.

டேராடூனில் மத்திய சர்க்காரின் கல்விமந்திரி காரியாலயத்தினரால் நடத்தப்பட்டுவரும் ப்ரெய்லி ப்ரஸ்மூலம் இதுவரை பார்வையிழந்தவர்களின் உபயோகத்துக்கான நூல்கள் 21 வெளியிடப்பட்டிருக்கின்றன. இவைகள் ஹிந்தி, ஆங்கிலம், தெலுங்கு, மராத்தி, குஜராத்தி மொழிகளில் உள்ளன.

சென்னையில் அகில இந்திய கைநுட்பத் தொழில்போர்டு இந்திய சங்கீதக் கருவிகளைஉற்பத்தி செய்வதற்கான பயிற்சிச் சாலையொன்றை மத்திய சர்க்காரின் உதவியுடன் ஏற்படுத்தும். இந்தப் பயிற்சி நிலையத்தில் சாஸ்திரீய ரீதியில் இவ்விதக் கருவிகளை உற்பத்தி செய்வதற்கான பயிற்சியளிக்கப்படும்; இதன் மூலம் நல்ல தரமான கருவிகள் பொதுமக்களுக்குக் கிடைக்கவழியேற்படும். ஆரம்பத்தில்20மாணவர்களுக்கு இத்தொழிலில் 10 மாதங்கள் பயிற்சியளிக்கப்படும்.

டேராடூனிலுள்ள வேல்ஸ் இளவரசர் ராணுவக் கல்லூரி டேரா சைனியப் பள்ளிக்கூடம் எனப் பெயர் மாற்றப்பட்டிருக்கிறது. இதில் பயிற்சி பெறுவோர் தேசிய பாதுகாப்புக் கழகத்தில் சேர உதவியாக இருக்கி

றது. இப்பள்ளிக்கூடத்தில் இப்பொழுது 160 மாணவர்களிருக்கிறார்கள்.

இந்திய ரயில்வேக்கள் 1953, 1954, 1955 (ஆகஸ்ட் 15உ வரையில்)-ம் வருஷங்களில் புதிதாக 488 வண்டிகள் விட்டிருக்கின்றன, மேலும் 304 வண்டிகளில் பிரயாண தூரத்தை விஸ்தரித்துள்ளன.

இந்திய ரயில்வேக்களில் 1947-லிருந்து 1955அக்டோபர் வரையில் புதிதாக மொத்தம் 4,939 பிரயாணிப் பெட்டிகள் சேர்க்கப்பட்டன. அவற்றில் 4,455 பெட்டிகள் இந்தியாவிலேயே தயாரிக்கப்பட்டவை.

குறைந்த வருமானமுள்ளவர்களுக்குச் சர்க்கார் உதவியுடன் வீடுகட்டித்தரும் திட்டத்தின் கீழ், இந்தியசர்க்கார் பல்வேறு ராஜ்ய சர்க்கார்களுக்கு, 1955 அக்டோபர் கடைசி வரையில் மொத்தம் 20.49கோடி ரூபாய் வரை கடன்தொகைவழங்க அனுமதியளித்திருக்கின்றனர்.

மத்திய சமூக க்ஷேமநல போர்டு சமூகசேவை ஸ்தாபனங்களுக்கு இதுவரையில் மொத்தம் 2,787 மானியங்கள் வழங்கியிருக்கிறது; இதுவரை அனுமதிக்கப்பட்டுள்ள தொகை மொத்தம் 75,89,726 ரூபாயாகும்.

1955ல் (ஆகஸ்ட் கடைசி வரையில்) மொத்தம் சுமார் 5.22 கோடி ரூபாய் மதிப்புளள தேசியத் திட்டப்பத்திரங்கள் பொது ஜனங்களுக்கு விற்பனை செய்யப்பட்டன.

1955 மார்ச் கடைசிவரையில் மொத்தம் 8,78,984 கைத்தறிகள் கூட்டுறவு ஏற்பாட்டின்கீழ் கொண்டுவரபபட்டுள்ளன.

முதலாவது ஐந்து வருஷத் திட்டத்தில் மொத்தம் 1,200 சமுதாய நலத்திட்ட மண்டலங்களை ஏற்படுத்தத் திட்டமிடப்பட்டிருந்ததில் 1,031 மண்டலங்கள் இதுவரை ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவைகளில் சேர்க்கப்பட்டுள்ள கிராமங்களின் மொத்த எண்ணிக்கை 1,06,057 ஆகும்.

1955 ஏப்ரலிலிருந்து அக்டோபர் 31ந் தேதி வரையில் மொத்தம் 795 இளைஞர் முகாம்கள் நடத்தப்பட்டுள்ளன. 1954 55ம் வருஷத்தில் நடத்தப்பட்ட முகாம்களின் எண்ணிக்கை

447 ஆகும். இம் முகாம்களை நடத்துவதற்காக மத்திய சர்க்கார் 1955ல் அக்டோபர் 31-ந் தேதி வரை மொத்தம் 44,96,528 ரூபாய் வழங்கியிருக்கின்றனர்.

சர்க்காருக்குச் சொந்தமான நிலக்கரிச் சுரங்கங்களின் அபிவிருத்திக்காகச்சுமார் ஒரு கோடி ரூபாய் செலவாகக்கூடிய 14 திட்டங்களுக்கு மத்திய சர்க்கார் இதுவரை அனுமதியளித்திருக்கின்றனர். இரண்டாவது ஐந்து வருஷத் திட்டகாலத்தில், சுமார் 1.2 கோடி ரூபாய் செலவாகக் கூடிய மேலும் 25 திட்டங்களை மேற்கொள்ள உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

இந்திய ரயில்வேக்களில் இப்போது மொத்தம் 24 மூன்றுவது வகுப்பு 'டூரிஸ்ட்' பெட்டிகள் இருக்கின்றன. 1955,56ல் மேலும் இரண்டு பெட்டிகள் சேர்க்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்தியாவிலிருந்து 1955 முதல் ஒன்பது மாதங்களில் மொத்தம் சுமார் 82,232 டன் அரிசி ஏற்றுமதி செய்யப்பட்டது.

சித்தரஞ்சன் எஞ்சின் உற்பத்திச்சாலை வருஷத்துக்கு 120 எஞ்சின்கள் வீதம் உற்பத்திசெய்வதென்ற லட்சிய எல்லையை ஏற்கெனவே தாண்டிவிட்டது. எஞ்சின் உற்பத்தியானது 1954 ஆரம்ப தசையில் மாதமொன்றுக்கு ஆறு ஆக இருந்தது துரிதமாக அபிவிருத்தியடைந்து 1955 ஜனவரி-ஜூன் கால அளவில் மாதமொன்றுக்குப் பத்தாக அதிகரித்துவிட்டிருக்கிறது. அதற்குப் பிறகு மாதமொன்றுக்கு பதினொரு எஞ்சின்கள்வீதம் ஒரே ரீதியில் உற்பத்தியாகி வருகிறது.

ரயில்வேயில் போஜன சேவை சம்பந்தமாக உத்தியோகச் சார்பற்றவர்களின் கருத்துக்களையும் பிரதிபலிக்கச்செய்யும் நோக்கத்துடன், கிழக்கத்தி ரயில்வேயில் போஜன வசதி மேற்பார்வைக் கமிட்டியொன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இக் கமிட்டியினர் ரயில்வேயினால் நடத்தப்படுகிற போஜனசாலைக்கும் தனிப்பட்ட கன்ட்ராக்டர்களால் நிர்வகிக்கப்படுகிற போஜன சாலைகளுக்கும் சென்று மேற்பார்வையிடுவார்கள்.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-15
மன்மத - தை-13
26-1-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## நெய்தல்

சிறைப்புறமாகத் தலைவன் வந்திருப்பதை அறிந்த தோழி அவன் கேட்டு விரைந்து வரைந்துகொள்ளுமாற்றல் தலைவியிடம் கூறியது.

மையற விளங்கிய மணிநிற விசும்பிற், கைதொழு மரபி னெழுமீன் போலப், பெருங்கடற் பரப்பி னிரும்புறந் தோயச், சிறுவெண் காக்கை பலவுட னாடுந், துறைபுலம் புடைத்தே தோழி பண்டு, முள்ளூர்க் குரீஇக் கருவுடைத் தன்ன, பெரும்போ தவிழ்ந்த கருந்தாட் புன்னைக், கானலங் கோண்கன் தந்த, காத னம்மோடு நீங்கா மாறே 231

:-இளநாகனார்

தோழீ! இதன் முன்னும் மனையின் கண்ணே உள்ள ஊர்க் குருவியின் முட்டையை உடைத்தாற்போன்ற பெரிய அரும்பு மலர்ந்த கரிய அடியையுடைய புன்னையஞ் சோலையினனுகிய கொண்கன் கொடுத்த காதலானது நம்மைவிட்டு நீங்காமையால் குற்றமற விளங்கிய நீலமணி போன்ற நிறத்தையுடைய விசும்பிலே தோன்றி அனைவராலும் கைதொழப்பெறுகின்ற தகுதியையுடைய எழுமீன்களைப்போலப் பெரிய கடற்பரப்பிலே கரிய முதுகு நனையும்படி சிறிய வெளிய நீர்க்காக்கை பல ஒருசேர ஆடுகின்ற கடற்றுறை நமக்கு இன்னாமையுடையதாயிருக்கின்றது.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

காரார் குழலியு நாமும் புணரின்பங் காப்புகலி
யூரார் முதலும் உயிரும் புணரின்ப மொக்குமேனி
லேரா ரொருதலை யின்பே யதுமற் றிருதலையுஞ்
சேரா மருவின்ப மீதேனில் யாதிணை செப்புவதே.

:-சீகாழிக்கோவை 470

உரை:- 'கார் ஆர் குழலியும்-மேகம் போன்ற கருநிறம் பொருந்திய கூந்தலையுடைய இம் மங்கையும், நாமும் - நாமும், புணர் இன்பம்-கூடுவதால் உண்டாகின்ற இன்பம், கா - சோலைகள் சூழ்ந்த, புகலி ஊர் ஆர்-திருப்புகலித் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற, முதலும்-முதற்கடவுளாகிய சிவ பெருமானும், உயிரும் - ஆன்மாவும், புணர் இன்பம் - சேருகின்ற போது உண்டாகும்இன்பத்தை, ஒக்கும் எனில்-ஒக்கும் என்று சொன்னால், அது-அவ்வின்பம், ஏர் ஆர்-இனிமை பொருந்திய, ஒருதலை இன்பே - ஒருபால் அமைந்த இன்பமே யாகும், மற்று இருதலையும்-மற்றை இருபாலும், சேரா-சேர,மருவு-இன்பம் ஈது எனில் - உண்டாகின்ற இன்பம்இதுவென்று சொன்னால், யாது இணை செப்புவது - இதற்கிணையாக எதைச் சொல்லுவது' என்பதாகும்.

சீகாழிக்கோவையை இயற்றியவர்கள் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள். இதிலுள்ள பாடற்றொகை ஐந்நூற்று முப்பத்து நான்கு. இது 1861ம் ஆண்டில் அரங்கேற்றப் பெற்றது. பிள்ளையவர்கள் இதனை இயற்றி அரங்கேற்றியபொழுது அவர்களுக்கு நாற்பத்தைந்து வயதென்று அவர்கள் சரித்திரத்தால் அறிகிறோம்.

அக்காலத்தில் சீகாழியில் வேதநாயகம்பிள்ளை முன்சீப்பாயிருந்தார். அவர் விருப்பத்தை யேற்றுப் பிள்ளையவர்கள் சென்னை செல்லும் வழியி

சீகாழிக்கு வந்து அவர் வீட்டில் தங்கியிருந்தார்கள். அப்போது அவர் நீதிநூலைச்செய்து வைத்திருந்தமையால் அதனை இவர்களிடம் காட்டி வேண்டிய திருத்தங்களைச் செய்துகொண்டாராம். அவருடைய தம்பியாகிய ஞானப்பிரகாசம் பிள்ளையின் வேண்டுகோளுக்கு இணங்கி அந் நூலுக்குச் சிறப்புப்பாயிரமும் வழங்கினார்களாம்.

பிள்ளையவர்களது தலைசிறந்த பண்புகள் பலவற்றுள், தகுதியுடையார் எவராயினும் அவரை மனமாரப் பாராட்டுவதும் ஒன்று. வேதநாயகம் பிள்ளை, பிள்ளையவர்களிடம் பாடங் கேட்ட மாணவர் பலருள் ஒருவர். அவரது நேர்மையையும் அருமை பெருமைகளையும் உள்ளவாறறிந்த பிள்ளையவர்கள் அவர் மீது ஐந்திணைக் கோவை யொன்றை இயற்றினார்கள். அதுவே, பிள்ளையவர்களின் கோவைப்பிரபந்தங்களில் முதலாவதாகஇயற்றப் பெற்றதாகும். அதன் செய்யுட்டொகை நானூற்று முப்பத்தெட்டு. அது குளத்தூர்க் கோவையென வழங்குகின்றது.

பிள்ளையவர்கள் இயற்றிய இரண்டாவது கோவை திருமயிலையிலிருந்த வியாசர்பாடி விநாயக முதலியார் மீது இயற்றிய வியாசைக் கோவையாகும். இதில் முதல் நூறுபாடல்கள் மட்டுமே இவர்களாலியற்றப் பெற்றனவென்றும், மற்றவை தியாகராசச் செட்டியாரால் இயற்றப்பெற்றனவென்றும்சொல்லுவர். மூன்றாவதாகப் பிள்ளையவர்கள் இயற்றியது சீகாழிக் கோவை. சீகாழியிற் பிள்ளையவர்கள் தங்கியிருந்தபொழுதுகுளத்தூர்க்கோவையிலிருந்து சில பாடல்கள் சொல்லிக்காட்ட வேண்டுமென்று சிலர் கேட்டுக்கொள்ள அதன்படி இவர்கள் சொல்லிக்காட்ட, அதனைக் கேட்ட சைவச்செல்வர்களிற் சிலர் அத்தலத்துப் பிரமபுரேசர் மீது ஒரு கோவை பாடித் தரவேண்டுமென்று நேரிலும் வேதநாயகம்பிள்ளை மூலமாகவும் வேண்டிக் கொள்ள, அதற்கிசைந்தே பிள்ளையவர்கள் சீகாழிக்கோவையை இயற்றி முடித்தார்கள்.

இந்நூல் அரங்கேற்றப் பெற்ற இடம் பிரமபுரேசர் கோயிலின் தெற்குப் பிராகாரத்திலுள்ள வலம்புரி மண்டபம். அரங்கேற்றுவிழாவுக்கு நாடோறும் தலைவராயிருந்து பெருமை தந்தவர், நீதிபதியாகிய வேத

நாயகம் பிள்ளை. ஒவ்வொரு நாளும் அரங்கேற்றுதல் முடிந்தவுடன் நூலையும் ஆசிரியரையும் பாராட்டி அவர் ஒவ்வொரு பாடல் பாடினர். அவ்வாறு பாடிய பாடல்களில் இருப்பது இப்போது கிடைக்கின்றன.

அப்பாடல்கள் அனைத்துமே சிறப்புடையனவென்றாலும் 'விதி யெதிரிலரி முதலோர் புகல்புகலி யீசரே விண்ணோர் மண்ணோர், துதிபொதிபல் பாமாலை பெற்றிருப்பீர் மீனாட்சி சுந்தரப்பேர், மதிமுதியன் கோவையைப்போற் பெற்றீர்கொலிக்காழி வைப்பினீதி, யதிபதி நாமெனவறிவீர் நம் முன்னஞ் சத்தியமா வறைகுவீரே' என்றபாடல் வேதநாயகம் பிள்ளை பெருமை-சீகாழிக் கோவையின்தகுதி - பிள்ளைபவர்களின் ஆற்றல் முதலியவற்றைத் தெள்ளத்தெளிய விளக்கிக் கொண்டிருக்கிறது.

இக்கோவை அரங்கேற்றப் பெற்றபின்னர் பொன்னும்பொருளும் புடணமும் வழங்கி ஆசிரியரைப் பாராட்டினர்கள். சீகாழித் திருக்கோயில் தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமானது. அத்திருத்தலத்திற்குக் கோவை பாடி அரங்கேற்றிய பிள்ளையவர்களை அப்போது ஆதீனகர்த்தராக விளங்கிய ஸ்ரீ சச்சிதானந்த தேசிக மூர்த்திகள் பரிசுகள்பல வழங்கிச் சிறப்பித்தார்களாம்.

இக்கோவையில் இந்தத் திருத்தலத்தைப்பற்றிய சரித்திரங்கள் பலவும், மற்றைத் தல சரித்திரங்கள் -நாயன்மார் வரலாறுகள்-சைவசித்தாந்த உண்மைகளும் இடம் பெற்றுள்ளன. இக்கோவையின் பாடற்றெகை மற்றைக் கோவைகளின் பாடற்றெகையைவிட மிகுதியா யிருப்பதற்குக் காரணம் இதில் சில துறைகள் அதிகமாயிருப்பதேயாம். இத்துறைகள் இலக்கண விளக்கத்தின் விதியைத் தழுவி அமைக்கப்பெற்றதென்பர்.

தலைவியைக் களவிற் புணர்ந்தொழுகிய தலைவன், சில நாட்களுக்குப் பிறகு அவளை மணம் புரிந்துகொண்டு இல்வாழ்க்கை நடத்துவான். இதனைக் கூறும் பகுதி கற்பியலில் தொடங்கும். களவியலில் களவுப்புணர்ச்சியையும் வரைவியலில் திருமணத்தையும் விளக்கிக்கூறிக் கற்பியலில் இல்வாழ்க்கையை உரைப்பது கோவைநூல்களின் மரபு. 'இல்வாழ்க்கை யென்பது, தலைவனுந் தலைவியும் இல்லின் கண் வாழும் வாழ்க்கையைக் கூறு

தல்' என்பார் சொக்கப்ப நாவலர்.

'கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி, பாங்கி மகிழ்ச்சி செவிலி மகிழ்ச்சியென், றீங்கு நால்வகைத் தில்வாழ்க் கையே' என்பது அகப்பொருட் சூத்திரம். இதனால் தலைவனும் தலைவியும் தோழியும் செவிலியுமாகிய நால்வரது மகிழ்ச்சிபற்றிக் கூறுவது, இல்வாழ்க்கைப் பகுதியென்பது உணரப்பெறும். இவர்களது மகிழ்ச்சிபற்றிக் கூறுதலெனவே, அம்மகிழ்ச்சிக்கு உடனிகழ்வனவாகியமற்றையநிகழ்ச்சிகளும் கூறப்பெறுமென்பது சொல்லாமலே அமையும்.

இல் வாழ்க்கையில் அனைவரும் இன்புற்றிருக்கும் வேளையில், இன்பத்தின் எல்லையில் துன்பமும், துன்பத்தின் எல்லையில் இன்பமும் இருக்குமாற்றை உணர்த்துவதுபோல் தலைவியிடமிருந்து தலைவன் பிரிவதற்குரிய வாயில்கள் உண்டாகும். அவை தலைவன் பரத்தைமேற் காதலாய்த் தலைவியைப் பிரிந்து பரத்தையர் சேரியிற் போதலும், கல்வி காரணமாகப் பிரிதலும், நாடுகாத்தற்குப் பிரிதலும், இரண்டு அரசர்கள் தம்முட் போராகின்றவிடத்து அவரைச் சந்து செய்வித்தற்குப் பிரிதலும், நண்பாகிய வேந்தனுக்குப் பகைவேந்தர் இடையூறுற்றவழி அது தீர்த்தற்குத் துணையாகப் பிரிதலும், பொருளீட்டுதல் காரணமாகப் பிரிதலும் என ஆறுவகையினவாம். இவை முறையே பரத்தையிற் பிரிவு, ஓதற்பிரிவு, காவற்பிரிவு, தூதிற்பிரிவு, துணைவயிற்பிரிவு, பொருள் வயிற்பிரிவு என்று சொல்லப்பெறும்.

இவ்வாறனுள் முதற்கண்ணதாகிய பரத்தையைப் புணரும் நிமித்தமாகத் தலைவன் பிரிந்தும், அவனது பிரிவாற்றாது தலைவி வருந்துவாள். அவள் வருத்தத்தை உடனிருப்பவளாகிய தோழியறிந்து, அதற்குரிய காரணத்தை வினவித் தெரிந்து தலைவியை இடித்துக் கூறுவாள், இதனிடைய தலைவிக்குத் திங்கட்பூப்புஉண்டாகும். அதனைத் தலைவனுக்கு அறிவிக்க நாலாநாள் நீராடியபின் சேடியைச் செம்பூச்சூடிச் செவ்வாடையுடுத்திச் செஞ்சாந்துபூசிப் பரத்தையர் சேரிக்கு அனுப்புவாள்.

'பூப்பின் புறப்பா டீராறு நாளும், நீத்தகன்றுரையா ரென்மனர் புலவர், பரத்தையிற்

(12ம் பக்கம் பார்க்க)

## திருவாவடுதுறையில் திருமந்திர மாநாடு

திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் கட்டளையின்படி 11-1-56ல் திருமடத்தின் கொலுமண்டபத்தில் சென்னை முன்னாள் மேயர் திரு, எஸ். இராமசாமி நாயுடு தலைமையில் மூன்றாவது ஆண்டு திருமந்திர மாநாடு துவக்கமானது.

மாநாடு துவக்கமாவதற்குமுன்னர் மாநாட்டின் தலைவர் திரு, இராமசாமி நாயுடுவையும், மாநாட்டின் திறப்பாளரான தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தின் கௌரவச் செயலாளர் திரு, எஸ். கோபால அய்யரையும் ஆதீன நாதசுர வித்துவான் திரு, நடராசசுந்தரம் குழுவினர்கள் நாதசுர வாத்திய முழக்கங்களுடன் கொலுமண்டபத்திற்கு அழைத்துக்கொண்டு வந்தார்கள்.

கொலு மண்டபத்தில் மகா சந்நிதானம் இருவருக்கும் மாலைகள்சூட்டி, விலையுயர்ந்த இரு பொன்னாடைகளையும் போர்த்தி வரவேற்றார்கள்.

ஆதீனத்தின் சார்பில் மகா வித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அனைவரையும் வரவேற்றார்.

பின்னர் திரு, எஸ். கோபால அய்யர் மாநாட்டைத் தொடங்கி வைத்துப்பேசினார்.

மாநாட்டின் தலைவர் திரு' இராமசாமிநாயுடு பேருரைக்குப் பின் காஞ்சிபுரம் திரு, க. வச்சிரவேலு முதலியார் முதல்தந்திரம் 'உபதேசம்' என்னும் பொருள்பற்றியும், ஆதீன மகா வித்துவான் திரு, ச. தண்டபாணி தேசிகர் இரண்டாம் தந்திரம் 'அதோமுக தரிசனம்' என்னும் பொருள் பற்றியும், பாலகவி திரு, வே. இராமநாதன் செட்டியார் மூன்றும் தந்திரம் 'அட்டாங்க யோகம்' என்னும் பொருள்பற்றியும்அன்னாருடைய குமாரத்திமீனாட்சி'குருவழிபாடு' என்னும் பொருள் பற்றியும் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

2வது நாள் மாநாடு 12-1-56 அன்று மாலை 4மணிக்கு மீண்டும் சென்னை முன்னாள் மேயர் திரு, எஸ். இராமசாமி நாயுடு தலைமையில் நடைபெற்றது.

பழனி மகாமகோபாத்தியாய ஈசான சிவாச்சாரியார் நான்காந் தந்திரம் 'திருவம்பலச்சக்கரம்' என்னும் பொருள் பற்றியும் ஆதீன வித்துவான் கடலூர் திரு, தே. ஆ. சீனிவாசாசாரியார் ஐந்தாந்தந்திரம் 'ஞானம்' என்னும் பொருள் பற்றியும் சென்னைப் பல்கலைக்கழகம் தத்துவத் துணைப் பேராசிரியர் டாக்டர் திரு, தேவசேனாபதி ஆறாந்தந்திரம் 'திருவடிப்பேறு' என்னும் பொருள்பற்றியும் பேசினார்கள்.

13-1-56 மாலை 4 மணிக்கு 3ஆவது நாள் மாநாடு சென்னை திரு, தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை தலைமையில் நடைபெற்றது.

சென்னை திரு, கி. வா. சகந்நாதன், சென்னை டி. எம். பி. மகாதேவன், ஆதீன மகாவித்துவான் நாகர்கோவில் திரு, கே. ஆறுமுகநாவலர் பேசிய பிறகு மாநாடு முடிவுபெற்றது.

---

## பாராட்டு விழா

தேவகோட்டை ஜன 18-நம்நகர்ச் சிவபூசா துரந்தரர் திரு, அரு லெ வெ நடராசன் செட்டியாரவர்களின் செல்வன் வெங்கடாசலம், ஐரோப்பாவில் நூற்புத் தொழில் - நெசவுத் தொழிற் கல்வி கற்றுத் தேறித் தாய்நாடு வந்துள்ளார்கள். அவர்களுக்கு அரு ராம- அரு லெ குடும்பத்தினர் திரு, அள அரு சுப்பையா செட்டியாரவர்கள் தலைமையில் இன்று ஓர் விருந்தும் பாராட்டு விழாவும் நடத்தினர். பாலகவி இராமநாதன் செட்டியார், வித்துவான் கோதண்டபாணி ஆகியோர் பாராட்டிப் பேசினார்கள்.

---

## தேவாரப் பரிசு

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் சமயாசாரியர் மூவர் நினைவாகத் தேவாரப் பரிசு நிதி 10 ஆயிரம் ரூபாய் வழங்கியிருப்பதின் திட்டத்தின்கீழ் திருவாரூரிலுள்ள போர்டு உயர்நிலைப் பள்ளியில் 4ஆவது படிவம் வாசித்துவரும் மாணவர் எஸ். சரவணபவானந்தா தேவாரப் பரிசு ரூ 50 பெற்றார்,

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத தை - 13

## சண்டேசர் திருநாள்

தேவாரத் திருமுறைகளில் மூவராலும் பாராட்டப்பெற்ற பெருமை சண்டேசுர நாயனுருக்கு உண்டு. சிவாலயங்களில் சிவதேரிசன பலனையும் சிவபூசையில் பூசைப்பலனையும் நல்குகின்றவர் சண்டேசுரர். சூரியன் முதலாகச் சண்டேசர் இறுதியாகப் பூசிப்பது சிவபூசைமுறை. இதனை 'சௌராதி சண்டேசாந்தம்' என்று சொல்லுவர்.

சண்டேசுரநாயனுர் வரலாறு சேக்கிழார் பெருமானுல் அறுபது திருப்பாடல்களில் அருளிச் செய்யப்பெற்றது. பசுக்காத்தலால் கிடைக்கும் பெரும்பேற்றுக்குச் சண்டேசர் வரலாறு தக்க சான்ருகும். பசுநிரைகளை மேய்த்தஇடையன், ஒருபசுவைக் கோல்கொண்டு அடித்ததுகண்டு பொருராய்த்தாமே அந்நிரையை மெய்யன்போடு மேய்த்தார் சண்டேசர்.

உயிர்கள் எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தபிறகு, இறுதியாக அவைகளுக்கு மனிதப் பிறவி கிடைக்கும். 'இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது நாம் கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறுதற் பொருட்டேயாம்' என்பார்கள் ஸ்ரீல ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள்' இவ்வரிய பிறவியை நமக்கு உண்டாக்கிய ஆண்டவனை மனத்தினுற் சிந்தித்து வாயினுல் வாழ்த்திக், காயத்தினுல் வழிபடவேண்

டியது நமது தலையாய கடமையாகும்.

மனமொழி மெய்யாகிய மூன்றும் ஒன்றி இறைவனுக்காவது சிவபூசையிலேயேயாம். இதனாற்றான் திருமால் பிரமன் முதலிய தேவரெல்லாரும் இந்நிலவுலகத் திருத்தலங்களுக்கு வந்து பூசை செய்து வழிபட்டார்களென்று புராணங்கள் கூறுகின்றன. 'வானிடத்தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச்சிப்பர்' என்பது சிவஞான சித்தியார். இங்கே அர்ச்சனையென்று குறிப்பது பூசையையேயாம்.

பரமசிவன், நிராகார வஸ்துவாகிய தம்மை ஆன்மாக்கள் தியானித்தல் பூசித்தல் கூடாமையால் பத்தர் அநுக்கிரகத்தின் பொருட்டுச் சத்திகாரியமாகிய வித்தியாதேகத்தைக் கொண்டு எழுந்தருளுவார். சிவலிங்கத்தில் சிவனை ஆவாகித்து முறைப்படி அன்போடு பூசை செய்தால் அவர் அவ்விலிங்கத்தில் நின்று பூசையை ஏற்று, அது செய்தார்க்கு அருள்புரிவார்.

சிவபூசை செய்வதிற் சிறந்த புண்ணியமும் அதற்கு இடையூறு செய்வதிற் கொடிய பாவமும் வேறில்லை. சிவபூசைக்கு இடையூறு செய்தவன் பெற்ற தகப்பனுயிருந்துங்கூட, அவன்செய்த மன்னிக்கமுடியாத பிழைக்கு ஏற்ற தண்டனையை நாயனார் கொடுத்தார். 'பாதகமென்றும் பழியென்றும் பாராதே, தாதையை வேதியனைத் தாளிரண்டும்-சேதிப்ப' என்றும் நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மையாய்த்தே' என்றும் மெய்கண்ட நூல்களும் 'வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினலெறிந்த' எனத் திருமுறையும் கூறின.

உயிர்த்தந்தைக்குச் செய்யும் வழிபாட்டிற்கு ஊறு செய்த உடற்றந்தையை ஒறுத்து, அந்த உடம்பு தன்னுடனேயே அரனுர் மகனராகிய சண்டேசப்பெருமானது நினைவுநாள் **31-1-56** தையுத்திர மாகும். சிவகுமாரராகிய அவரது திருவடிகளுக்குச் சிறப்பாக வழிபாடாற்றி நலம்பெறுவோமாக.

---

## இராமநாதபுர மாவட்ட சாரணீயர் சந்திப்பு

காரைக்குடி மீ. சு. உயர்நிலைப் பள்ளியில் 15-1-56 காலை 11 மணிக்கு சாரணீயர் சந்திப்பு. மாநில நிர்மாணக் கமிஷனர் திரு, எம். ராஜகோபாலன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பல ஊர்களிலிருந்தும் பிரதிநிதிகள் கூட்டத்திற்கு வந்திருந்தனர். கூட்டத் தொடக்கத்தில் அண்மையில இவ்வுலக வாழ்க்கையைப் பிரிந்த நம் இயக்கத்தின் தேசீய நிர்மாணக் கமிஷனர் பண்டிட் ஸ்ரீராம்பாஜ்பாய் அவர்களுக்கும், மாவட்ட முன்னாள் தலைவரும், பொருளாளருமான திரு, M. RM. பெரியணன் செட்டியார் அவர்களுக்கும் அனுதாபம் தெரிவித்து அன்னார்களின் ஆத்மா சாந்தியடையப் பிரார்த்தித்து இரு நிமிடங்கள் எழுந்துநின்று பின் தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவெய்தின.

புதிதாகக் காரைக்குடி நகரத்திற்கு உதவிச்சாரணர் கமிஷனராக நியமனம் பெற்றுள்ள திரு, T. R. ராஜகோபாலன் (முனிசிபல் கமிஷனர்) அவர்கட்கும் திருவாடானைத் தாலுகாவிற்கு உதவிச்சாரணர் கமிஷனராக நியமனம் பெற்றுள்ள திரு, T. M. காந்திமதி அவர்கட்கும் அத்தாட்சிகள் வழங்கப்பெற்றன.

காளையார்கோவிலில் பயிற்சி பெற்ற சாரணாசிரியர் அத்தாட்சிகள் (certificates) திரு, க. மு. ப. முத்தையா, திரு, அரு. இலக்குவன் இருவருக்கும் வழங்கப்பெற்றது.

1956-57ம் ஆண்டுத் திட்டங்கள்பற்றி ஆலோசித்துக் கீழ்க் கண்டவாறு முடிவு செய்யப்பெற்றது.

ஜனவரி: மகாமகசேவைக்குத் தயார்செய்தல் குடியரசுதினம், பிப்பிரவரி: மகாமகம்சேவை, மார்ச்சு: 1956-57க்குப்படைகளை புதுப்பித்தல், ஏப்ரல்: ஸ்தலசங்க மாவட்டச்சங்க ஆண்டுக்கூட்டங்கள், மே: கிராமசேவை முகாம் மறுமுறைப்பயிற்சி, ஜூன்: பள்ளிகள் திறந்தபின் படைகளைப் புதுப்பித்தல், ஜூலை: மாவட்ட ஊழியர்கள் கூட்டம், நடந்த வேலைகளைப் பரிசீலனை செய்தல். ஆகஸ்ட்: சுதந்திர தினக்கொண்டாட்டம், செப்டம்பர்: நவராத்திரி கா[?]ல ப்பயிற்சி முகாம்கள், அக்டோபர்: ம[?]த்திய முகாம், நவம்பர்: சாரணவாரம், டிசம்பர்: பயிற்சி முகாம்கள், சாரணர் மேளா.

மகாமகம் சேவை பற்றிய எல்லா ஏற்பாடுகளையும் செய்ய திரு. கதி. அருணாசலம் அவர்களை நியமித்திருக்கிறது.

## செயற்குழுக்கூட்டம்

15:1-56 பிற்பகல் 2 மணிக்கு மீ. சு. உயர்நிலைப்பள்ளியில் திரு அரு. அருணாசலம், மாவட்ட ஆணையாளர் அவர்கள் தலைமையில் செயற்குழுக்கூட்டம் நடைபெற்றது-

1. சென்ற செயற்குழுக் கூட்டத்து மினிட் வாசிக்கப்பெற்றது.

2. 1956-57ம் ஆண்டுக்கு வரவுசெலவுத் திட்டம் பரிசீலனை செய்யப்பெற்று ஏற்றுக்கொள்ளப்பட்டது.

3. திரு, கதி. அருணாசலம் தலைமையில் 100 சாரணர்களைக் கொண்ட ஒரு படையைக் கும்பகோணம் மகாமகசேவைக்கு அனுப்புவதென்றும் அதற்குத் தனிக் கழுத்துக்குட்டை (Searf) தயார்செய்வதென்றும் முடிவு செய்யப்பெற்றது.

4. கும்பகோணத்தில் நடைபெறும் பொருட்காட்சிக்கு திரு, க. விஸ்வேஸ்வரன் தலைமையில் சாரணர் திறமைகளைக் காட்டும் பொருள்களை அனுப்புவதென்றும் முடிவுசெய்யப்பெற்றது.

5. மாவட்ட உதவி ஆணையாளர்களுக்கு 1955 முடிய வந்துள்ள பிரயாணச் செலவுபில்கள் படி பணம் கொடுப்பதென்று முடிவுசெய்யப்பெற்றது.

6. அங்கத்தினர்கள் சேர்ப்பதில் நிர்வாகசபை உறுப்பினர்களும், சாரணீயர்களும் அதிகம் பங்குகொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளப்பெற்றது.

## அன்பளிப்பு

சிங்கப்பூர் ஜன 15-

மலாயாப் பல்கலைக் கழகத் தமிழ்நூல்நிலையத்துக்குச் சென்னையின் திரு, காமராசர் அரசாங்கம் அனுப்பிவைத்த 5245 நூல்களின் அறிகுறியாகச் சிங்கப்பூர் தமிழர் பிரதிநிதித்துவ சபைமூலம் அதன் தலைவர் திரு வயி சண்முகம்செட்டியார் ஜே. பி. அவர்கள் சில பெரு நூல்களைச் சர் சிட்னி கெயினிடம் அளித்தார்கள்.

## நேயர்களுக்கு!

'சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்' கட்டுரைத்தொடர்ச்சி அடுத்த வாரம் வெளிவரும்.

( 5ம் பக்கத் தொடர்ச்சி )

பிரிந்த காலை யான' என்பது விதியாதலின் பாங்கியோடு தலைவன் தன்மனைக்கு வருவான். வந்த தலைவனைத் தலைவி யெதிர்கொண்டு பணிந்து இன்பம் வழங்குவாள். உள்ளத்தில் உண்மையில்லாது புறத்தே அன்புடையவள்போல நடக்கும்இயல்புடைய பரத்தைப் புணர்ச்சியில் ஈடுபட்டு வந்த தலைவனுக்கு, அகமும் புறமும் ஒத்து அன்புசெய்யும் தலைவியின்பால் மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகும். அந்த மகிழ்ச்சியை அவன் வெளிப்படுத்துவதே மேற்கண்ட பாடலின் பொருளாய் அமைந்திருக்கின்றது.

சீகாழிக்குரிய பன்னிரண்டு திருப்பெயர்களுள் புகலி என்பதும் ஒன்று. புகலி என்ற சொல் அக்கு யாவருக்கும் புகலிடமாயிருப்பதென்பது பொருள். அந்தத் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற முழுமுதற் கடவுளாகிய இறைவனை உயிர்கள் அணைந்து கலந்து பெறும் இன்பத்தைப் பேரின்பமென்று சொல்லுவர். அதுவே, சாயுச்சியமென்று சொல்லப்பெறுகின்ற பரமுத்தி. பதமுத்திகளில் இரண்டாவதாகவுள்ள சாமீப பதவியே வைகுண்ட வாழ்க்கையிற் கிடைப்பதாகும். இதனை மனத்துட்கொண்ட திருவள்ளுவர் பெருமான் உடலொன்றிக் கலக்கின்ற சிற்றின்ப நுகர்ச்சியைக் கூறும்பொழுது 'தாம் வீழ்வார் மென்றோட் டுயிலினினிதுகொல், தாமரைக் கண்ணா னுலகு' என்று கூறியருளினர்.

முடிந்தமுடிபாயுள்ளபரமுத்தியில்இன்புறுவது உயிரொன்றேயாகும்அக்கலப்பால் இறைவனுக்கு எந்தஇன்பமுமில்லை. 'சுத்தஅநுபோகத்தைத் துய்த்தல் அணு-மெத்தவே, இன்பங் கொடுத்தல் இறை' என்பது ஞான சாத்திரம். இறைவன் அநுபவிக்கப் பெறும் பொருளாகவும், உயிர் அநுபவிக்கும் பொருளாகவும் இருந்து, ஒன்று இன்பத்தை வழங்க மற்றொன்று அதனைப் பெற இருப்பதால் ஒருபாலின்பம் தருவதாகிய அதனைவிட, ஆணும் பெண்ணுமாகிய இருவரும் கூடுகின்ற கூட்டில் உண்டாகின்ற இன்பம் இருவருக்கும் ஒருசேர நுகர்ச்சிக்கு வருதலின் இருபாலும் இன்பந்தருவதாகிய இதுவே சிறந்ததென்று ஆசிரியர் கூறும் நயம் அறிந்து மகிழுதற் குரியதாகும்.

## குருபூசைப் பெருவிழா

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீன ஸ்தாபகராகிய ஸ்ரீ நமசிவாய தேசிக மூர்த்திகளின் குருபூசை விழா 11-1-56 திருமந்திர மாநாட்டுடன்தொடங்கி 20-1-56ல் நிறைவுற்றது.

நாடோறும் ஆதீன வித்துவான்களால் சமயச்சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்றன. விழாவுக்குவந்திருந்த அனைவருக்கும் ஏழைமக்களுக்கும் நாடோறும் அறுசுவைஉண்டி வழங்கப்பெற்றது.

20-1-56 காலையில் ஞானமாநடராசப்பெருமானுக்கும்ஸ்ரீநமசிவாய மூர்த்திகளுக்கும்விசேட அபிடேக அலங்கார ஆராதனைகள் நிகழ்ந்தன. மாலையில் ஆதீனக் கொலுமண்டபத்தில் எம். எம். தண்டபாணி தேசிகரது இசையரங்கு நிகழ்ந்தது.

இரவு பூசை வழிபாட்டுக்குப் பிறகு குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் தந்தச்சிவிகையில் ஆரோகணித்து ஊர்வலம் வந்து அருட்கொலுவமர்ந்தருளிப் பிரசாதம் வழங்கினார்கள். புலவர் பெருமக்களும் பிறரும் வரிசைகள் பல பெற்று மகாசந்நிதானம் அவர்களின் அருட்கொடைக்கு மகிழ்ந்து பாராட்டினார்கள்.

## நமசிவாய மூர்த்தி அச்சகம்

திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள், ஞான சாத்திரங்களை வெளி அச்சகங்களில் அச்சிடுவதற்குக் காலதாமதம் ஏற்பட்டுவருவதைமுன்னிட்டுச்சுமார்2லட்சம்ரூபாய்க்கு மேல் செலவு செய்து ஆதீனத்தின் ஞானநிலையத்திலேயே பெரும் கட்டிடம்கட்டி அச்சு இயந்திரங்களை வாங்கிஅமைத்து ஆதிகுருமூர்த்தியாக உள்ள ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் நினைவாக நமசிவாயமூர்த்தி அச்சகம் என்ற நாமகரணம் சூட்டியுள்ளார்கள்.

முதன்முதல் சணபதி என்ற நூல் வெளியிடுவதற்காக அச்சு கோக்கப்பட்டது. திருமந்திர மகாநாட்டு மலர் 2ஆவது ஆக அச்சிடப்பெற்றது.

## தெரிந்து கொள்ளுங்கள்

நாட்டில் தசாம்ச முறையைக் கொண்டுவருவதற்கான சட்டம் 1871-ம் ஆண்டிலேயே நிறைவேற்றிவைக்கப்பட்டாலும்கூட இச்சட்டம் அமுல் நடத்தப்படாமலே இருந்துவந்தது.

இந்தியாவில் உணவு இறக்குமதிகள் 1950-51ல் 47 லட்சம் டன்னாக இருந்தது 1955ல் 7.7 லட்சம் டன்னுக்குக் குறைந்துவிட்டது. 1955ல் இறக்குமதி செய்யப்பட்ட உணவுப்பொருள்கள் இருப்பு வைப்பதற்காகவேயன்றி உடனடி உபயோகத்துக்கல்ல.

1954–55ல் மொத்தம் 134.9 லட்சம் டன் சரக்குகளை ஏற்றிக்கொண்டு 2,688 கப்பல்கள் பம்பாய்த் துறைமுகத்துக்கு வந்தன; இவற்றில் 1,299 இந்தியக் கொடியையும், 624 பிரிட்டிஷ் கொடியையும், 114 நார்வே கொடியையும், 108 அமெரிக்கக் கொடியையும் தாங்கியிருந்தன. வந்த கப்பல்களில் மிகப் பெரிய கப்பலில் 34,183 டன் சரக்கு கொண்டுவரப்பட்டது.

இந்தியாவிலுள்ளபுதிய எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலைகளில் இதுவரை அந்நிய நாட்டு மூலதனம் ரூ. 28.76 கோடியும், இந்திய மூலதனம் 15.01கோடி ரூபாயும் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. இவைகளில் மேலும் வெளிநாட்டு மூலதனம் ரூ. 13.97 கோடியும், இந்திய மூலதனம் ரூ 4.25 கோடியும் முதலீடு செய்யப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

கிழக்குப் பாக்கிஸ்தானிலிருந்தும் மேற்குப் பாக்கிஸ்தானிலிருந்தும் இடம்பெயர்ந்து வந்துள்ளவர்களுக்கு, புனர் வாழ்விப்பு நிதி நிர்வாகம் 1955 அக்டோபர் கடைசிவரையில் மொத்தம் 985.87 லட்சம் ரூபாய் கடன் தொகைகள் வழங்கியிருக்கிறது.

சமுதாய அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் இதுவரை மொத்தம் 452 சுகாதார நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

• 1955-56ம் வருஷத்தில் கதர்-கிராம கைத்தொழில்களின் அபிவிருத்தி வேலைகளுக்காக, இந்திய சர்க்கார் அகில இந்திய கதர்-கிராம கைத்தொழில்கள் போர்டுக்கு மானியங்களாக 5

கோடி ரூபாயும், கடன் தொகைகளாக 2.5 கோடி ரூபாயும் வழங்கியிருக்கிறார்கள்.

அந்தமான்-நிக்கோபார் தீவுகளில் தற்போது 31 ஆரம்பப் பள்ளிக்கூடங்களும், இரண்டு மத்தியதரப் பள்ளிக்கூடங்களும், ஒரு உயர்தரப் பள்ளிக்கூடமும் இருக்கின்றன.

இவ்வருஷம் ஜனவரியிலிருந்து அக்டோபர் 31-ந் தேதி வரை மொத்தம் 67,19,904 பேருக்கு பி ஸி ஜீ மருந்து குத்தப்பட்டிருக்கிறது.

இந்திய ரயில்வேக்கள், 1955 அக்டோபர் மாதத்தில்நாளொன்றுக்கு சராசரி 2,55,000 டன் வீதம் சரக்குகளை ஏற்றிச் சென்றன.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டக் கால இறுதிக்குள்ளாக 5,600 குழாய்க் கிணறுகள் அமைக்கப்பட்டு விடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. (திட்டத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ள லட்சிய அளவு 4,000) இக்கிணறுகள் மூலம் 8 லட்சம் ஏக்கரா நிலத்துக்குப் பாசனவசதி கிடைத்துவரும்.

மத்திய டிராக்டர் ஸ்தாபனம் இதுவரை மத்திய இந்தியாவில் 'கான்ஸ்' புல் அடர்ந்த பிரதேசத்தில் 10லட்சம் ஏக்கராவுக்கு அதிகமான நிலத்தையும், உத்தரப் பிரதேசத்திலும்,போப்பாலிலும் முறையே 41,000 ஏக்கராவும், 48,000ஏக்கரா காடடர்ந்த பிரதேசத்தையும்திருத்திப் பண்படுத்தியிருக்கிறது.

இந்தியாவில், தொழிற்சாலையில் வேலைசெய்பவர்களின் உற்பத்திசக்தி, 1950-54ம் ஆண்டு காலத்தில் சுமார் 43 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது. அதாவது இக்காலத்தில் வருஷத்துக்குச் சராசரி 8.6 சதவிகிதம் உயர்வு ஏற்பட்டுள்ளது.

கால அட்டவணைப்படிக்கும், அவ்வாறின்றியும் நடைபெற்ற இந்திய விமான சர்வீஸ்களின் மூலம் 1955ம் வருஷம் முதற் பாதியில் 2,98,173 பிரயாணிகள் ஏற்றிச்செல்லப்பட்டிருக்கின்றனர்; இதற்கு முந்திய அரைவருஷத்தில் இந்த எண்ணிக்கை 2,87,644.

இந்தியாவில் இப்பொழுது பிரயாணி பஸ்கள் சுமார் 40,000மும், லாரிகள் 90,000-மும் இருக்கின்றன.

பதினெட்டு ராஜ்ய சர்க்கார்கள் ஆரம்பக்கல்வியைக் கட்டாயமாக்கிச் சட்டம் இயற்றியுள்ளனர்.

பின் தங்கிய வகுப்புகளைச் சேர்ந்த 32,016 மாணவர்களுக்கு 1955ல் உபகாரச் சம்பளங்கள் வழங்கப்பட்டன. அவற்றிற்காக வந்திருந்த விண்ணப்பங்களின் மொத்த எண்ணிக்கை 58,381

நூல் நிலையங்களின் அபிவிருத்திக்காக, இந்திய சர்க்கார் நடப்பு வருஷத்தில் ராஜ்ய சர்க்கார்களுக்கு மொத்தம் 35,37,473 ரூபாய் வழங்கியிருக்கின்றனர். இந்தியாவில் சுமார் 32,000 நூல் நிலையங்கள் தற்போது உள்ளன; அவற்றில் மொத்தம் சுமார் 71 லட்சம் புஸ்தகங்கள் இருக்கின்றன.

சிந்ரி ரசாயன உர உற்பத்திசாலையில் அம்மோனியம் சல்பேட் உற்பத்தி புதியதொரு உச்சத்தை எட்டியிருக்கிறது. இவ்வருஷ உற்பத்தி லட்சிய அளவு 3,20,000 டன்னாகக் கொள்ளப்பட்டிருந்தபோதிலும் 1955 டிசம்பர் 27ந்தேதி நள்ளிரவுவரை மொத்தம் 3,20,262 டன் அம்மோனியம் சல்பேட் இங்கு உற்பத்தியாகியிருக்கிறது.

இந்தியாவில் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் தொழில் 1954ல் புதியதொரு உச்சத்தை எட்டியிருக்கிறது. 1953ம் வருஷத்துடன் ஒப்பிடுகையில் பாலிசிகளின் எண்ணிக்கை சுமார் 1,44,000மும் உறுதியளிக்கப்பட்ட தொகை 75.14 கோடி ரூபாயும், பிரீமியம் வருமானம் 3.29 கோடி ரூபாயும் அதிகரித்திருக்கின்றன.

இந்திய ரயில்வேக்களுக்கு சமசீதள வசதியுள்ள வகுப்பிலிருந்து 1955 ஏப்ரல் 1ந் தேதியிலிருந்து அக்டோபர் 31ந் தேதி வரையில் மொத்தம் 35 லட்சம் ரூபாய் வரையில் கிடைத்தது. முந்திய வருஷத்தில் இதற்குச் சரியான காலத்தில் கிடைத்த வருமானம் 28 லட்சம் ரூபாய்.

இந்தியாவிலுள்ள [illegible],100 கிராமங்களில் நடத்தப்பட்ட சாம்பிள் சர்வேயிலிருந்து நிறுத்தலளவை, முகத்தலளவை முறைகள் 143 அனுஷ்டானத்திலிருந்து வந்ததாகத் தெரிய வந்தது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-16
மன்மத - தை-20
2-2-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## குறிஞ்சி

**பகற்குறிக்கண் வந்தொழுகுந் தலைவனை இரவு தங்க வேண்டிப்பின் அதனையும்மறுத்து வரைவு கடாயது.**

சிறுகண் யானைப் பெருங்கை யீரினங், குளவித் தண்கயங் குழையத் தீண்டிச், சோனை வாழை முணைஇ யயிலது, வேரல் வேலிச் சிறுகுடி யலறச், செங்காற் பலவின் றீம்பழ மிசையு, மாமலை நாட தாம நல்கேன, வேண்டுதும் வாழிய வேந்தை வேங்கை, வீயுக விரிந்த முன்றிற், கல்கெழு பாக்கத் தல்கினை செலினே232. :முறுவேங்கண்ணனுர்

சிறிய கண்களையும் பெரிய கையையுமுடைய யானையினது களிறும் பிடியுமாகிய இரண்டினம் மலைப்பச்சையையுடைய குளிர்ந்த சுனையில் மெய்துவளப் புணர்ந்து சோலையிலுள்ள மலை வாழையைவெறுத்து அயலிடத்துள்ள மூங்கில் வேலியையுடைய சிறு குடியிலுள்ளார் அஞ்சியலறும்படி சிவந்த அடியையுடைய பலாவினது இனிய பழத்தைத் தின்னுகின்ற பெரிய மலை நாடனே! நீ நெடிது வாழ்வாயாக. எந்தையினது வேங்கைப்பூ உதிரும்படி அகன்ற வாயிலையுடைய மலையிலே பொருந்திய பாக்கத்தில் இன்று இராப்பொழுதில் தங்கிச் செல்லுவதாயின் அதற்கு அடையாளமாக நினது மாலையைக் கொடுப்பாயாக என வேண்டுவோம்.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

செம்மை வெண்ணீற் றேருமையினு ரிரண்டு பிறப்பின் சிறப்பினுர்
மும்மைத் தழலோம் பியநெறியரர் நான்கு வேத முறைபயின்ருர்
தம்மை யைந்து புலனும்பின் செல்லுந் தகையா ரறுதொழிலின்
மெய்மை யொழுக்க மேழுலகும் போற்று மறையோர் விளங்குவது.

:-சண்டேசுர நாயனுர் புராணம். 2

உரை:-'செம்மை-செம்மையை நல்குவதாகிய, வெண்ணீற்று-திருவெண்ணீற்று நெறியிலே, ஒருமையினுர்-ஒன்றுபட்ட ஒழுக்கமுடையவராய், இரண்டு பிறப்பின் - ஒருபிறவியிலேயே இரண்டு பிறவியை அடைகின்ற, சிறப்பினுர் - சீர்த்தியை உடையவராய், மும்மைத் தழல்-ஆகவனீயம், தட்சிணுக்கினி, காருகபத்தியம் என்று சொல்லப் பெறுகின்ற மூவகைத் தீயையும், ஓம்பிய நெறியார்-விடாது பாதுகாத்து வருகின்ற நன்னெறியை யுடையவராய், நான்கு வேதம்-இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்று சொல்லப் பெறுகின்ற நான்கு வேதங்களையும் முறைபயின்ருர்-பதம், சடை, கிரமம், கனம் ஆகிய முறைகளிற் பயின்றவராய், தம்மை-தங்களை, ஐந்து புலனும் - ஐந்து புலன்களும், பின் செல்லுந் தகையார்-தொடர்ந்து வருகின்ற தகுதி படைத்தவராய், அறு தொழிலின்-ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றலாகிய ஆறு தொழில்களிலும், மெய்மை ஒழுக்கம்-உண்மையாக ஒழுகுகின்ற ஒழுக்கத்தினை, ஏழு உலகும் போற்றும்-எல்லா உலகங்களும்பாராட்டத் தக்கவராய் உள்ள, மறையோர்-மறையவர்கள், விளங்குவது - புகழுடன் வாழுவது சேய்ஞலூர்' என்பதாகும்.

தெய்வப்புலவராகிய சேக்கிழார் பெருமான், சண்டேசுர நாயனுர் அவதரிக்கத் தவம் புரிந்த திருச்சேய்ஞலூர்த் திருப்பதியை நமக்கு அறிமுகப் படுத்துகின்றமுறையில் சில திருப்பாடல்களை அருளிச்செய்

துள்ளார். அவற்றுள் ஒன்றே, மேலே காணப்பெறும் திருப்பாடலாகும். நாயனாரது தோற்றம் மறையவர் குலத்திற்கு வாழ்வளித்ததாதலின், அம் மறையவர்களது செம்மை நிலையைப் பற்றி இத் திருப்பாடலில் ஆசிரியர் அறிவிக்கின்றார்.

ஒன்று தொடங்கி ஏழு வரை எண் அணி அமையயாக்கப் பெற்ற இத்திருப்பாடலில்,வேதியர்களது ஒழுக்கங்களில் தலை சிறந்ததாகிய திருவெண்ணீற்றொழுக்கம் மூ ஈ வில் எடுத்துக் கூறப்பெற்றது. உள்ளத்தின் கண் உள்ள செம்மையைப் புறத்தே புலப்படுத்துகின்ற இயல்பு திருநீற்றுக்கு உண்டு. 'பூசும் நீறுபோல் உள்ளும் புனிதர்கள்' என்பது சேக்கிழார் பெருமானின் மற்றொரு திருவாக்கு.

உள்ளும் புறமும் ஒத்த சைவ ஒழுக்கமுடையவர்களாக வாழ்ந்த மறையவர்கள், இடைக் காலத்தே புறச் சைவமும் அக வைணவமும் உடையவர்களாக ஆனார்களென்று தெரிகிறது. பூசுவதும் பூண்பதும் திருநீறு - உருத்திராக்கங்களாயிருப்பினும் ஓதுவது நாராயண மந்திரமாக, அவர்களிடம் மாறிய தற்குக் காரணம் இன்னதென்று தெரியவில்லை.

முப்போதும் திருமேனி தீண்டுவாராகிய தில்லைவாழந்தணர்களும் கூடத் தங்களது சைவ ஒருமையினை மறந்து புறத்தே தோற்றத்திற் சைவர்களாக வாழுகின்ற இந்நாளில், கேவலாத்துவிதவாதிகளாகிய பிராமணர்கள் அகமும் புறமும் வேறுபட்ட ஒழுக்கமுடையவர்களாக இருப்பதில் வியப்பென்ன இருக்கிறது!

பண்டைநாளில் வாழ்ந்த மறையவரனைவரும் சைவ ஒழுக்கம் பிறழாத தகையுடையவர்களாயிருந்திருக்கிறார்களென்பதற்குப் பல சான்றுகள் கிடைக்கின்றன. வைணவ மதத்தினரும் கூடச் சைவசமயத்தின்சோபான சமயமாகத் தங்கள் சமயத்தைக் கொண்டு தாய்ச் சமயமாகிய சைவத்திற்கு மாறுபாடில்லாத முறையில் ஒழுகி வந்திருக்கிறார்கள்.

வேதம் பொதுநூலென்பதும் ஆகமம் சிறப்புநூலென்பதும் முடிந்த முடிபான உண்மை. வேத உடன்பாடுடைய சமயங்கள் அனைத்தும் சைவநெறிக்குச் சோபானங்களாகுமேயன்றி

மாறுபாடுடையனவாகா. இந்த அடிப்படையை மனத்துட் கொண்டு பார்க்கும்பொழுது, மறையவர்களிடம் அகமும் புறமும் வேறுபட்ட ஒழுக்கம் நுழைந்திருப்பது ஏதோ பிசகாக நேர்ந்த ஒன்றென்றே கருத வேண்டியதிருக்கிறது.

வெண்ணீறு பூசுகின்ற ஒழுக்கம் ஒன்றுமட்டும் வேதியருக்குப் போதாதது என்னும் உண்மையை வலியுறுத்தவே ஆசிரியர் சேக்கிழார் பெருமான் 'செம்மை வெண்ணீற்று ஒருமையினர்' என்று கூறித், திருநீற்றுநெறியிற் பிறழாது ஒன்றுபட்ட உள்ளமுடைமையையும் குறிப்பாராயினர். இங்கே கூறப்பெற்ற செம்மை சிவத்தைக் குறிக்கும். சிவமாவது, முத்தி. 'முத்தி தருவது நீறு' என்பது தமிழ்மறை. திருநீறும் சிவமும் ஒன்றினென்று வேறுபட்டன வல்லவென்பது, சான்றோர் கண்டுரைத்த பேருண்மையாகும்.

ஒரு பிறவியிலேயே இரண்டு பிறப்பின்சிறப்பினை அடைகின்றவர் அந்தணர். அதனால் அவரை இருபிறப்பாளர் 'துவிசர்'என்று கூறுவர். தாய் வயிற்றில் ஒரு பிறப்பும் உபநயனச் சடங்கில் ஒருபிறப்புமாக இரண்டு பிறப்புக்களை அவர் அடைவர். விசேட தீக்கையில் வாகீசுவர வாகீசுவரிகளின் கருப்பத்திற் றங்கிச் சிவகுமாரனுகப் பிறக்கும்போதும் இருபிறப்புத் தன்மை உண்டாகும்.

மறையவர் மனையில் நாடோறும் வளர்க்கப்பெற வேண்டிய தீ மூன்றுவகைப்படும். அவற்றுள் ஆகவனீயம் என்பது தேவர்களுக்காக யாக சாலையின் வடகிழக்குப் பகுதியில் நாற்கோணக் குண்டத்தில் வளர்க்கப்பெறுவது தட்சிணாக்கினி என்பது, தெற்குப் பகுதியில் பிதிரர்களுக்காக அரைத்திங்கள் வடிவமான குண்டத்தில் வளர்க்கப்பெறுவது. காருகபத்தியமென்பது, ஆகவனீயத்தை அடுத்து வட்டவடிவமான குண்டத்தில் இல்வாழ்வோரால் வளர்க்கப்பெறுவது.

அந்தணர்களின் செந்தீயோம்புதலே, மாநிலத்து மன்னுயிர்களின் வாழ்வு வளத்திற்குக் காரணமாய் அமைவது என்று பெரியோர் கூறுவர். இதனுலேயே 'வாழ்க அந்தணர்' என்று தொடங்கிய திருப்பாசுரம், 'வையகமும் துயர் தீர்கவே' என்று முடிவுபெற்றது.

எந்த நாளிலும் விடாது எரி மூன்றேம்பும் ஏற்றம், சேய்ஞ லூர் மறையவரிடம் சிறந்திருந் தது. ஓம்புதல் என்ற சொல் லுக்கு இறக்கும்வரை விடாது பாதுகாத்தல் என்பது பொருள். நான்கு வேதங்களையும் முறையாக கப்பயின்றரெனவே, வேதம் பயிலுதற்குரிய முறையை வற் புறுத்தினராயிற்று. எந்தக் கலையையும் எவ்வாருகவேனும் பயிலலாமென்ற இக்காலக்கொள் கையினர் இதனை உளங்கொள் ளுதல் நல்லதாகும்.

மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்புலன்களும் மக் களின் மனத்தைத் தம்வழியி லீர்த்துக் கீழ்நிலைக்குச் செலுத் துவதனுலேயே கேடுகள் பெரி தும் உண்டாகின்றன. புலன்க ளின் வழியில் தாம் செல்லாது தம்வழியிற் புலன்களைச் செலுத் துபவரே, ஞானிகளாவர். 'ஐந்துமாறடக்கியுள்ளார்' என்று கண்ணப்பநாயனர் புராணத்திற் காளத்திமலை ஞானியரை அறி கின்றேம். 'உரனென்னுந் தோட் டியான் ஓரைந்தும் காப்பான்' என்பது திருக்குறள். ஐந்து புலன்களும் அம் மறையவரைப் பின்பற்றிச் செல்லுவன என்ப தால்அவரது புலனடக்கப் பெருமை வெளிப்படுகின்றது.

அந்தணர்க்குரிய தொழில்கள் ஆறும் மெய்மை நெறியில் நின் றனவென்பதில், அவற்றை யுடையாரிற் பலர் பொய்மை நெறியில் ஒழுகுதலும் உண் டென்பதை எடுத்துக்காட்டி, அவரிற் பிரித்துச் சேய்ஞலூர் மறையவர் திறத்தை அறிவிக் கிருர் ஆசிரியர்.

திருச்சேய்ஞலூர் மறையோர் குலத்தினர் தனித்துக் குடியி ருப்பதற்கென அரசனுல் அமைக்கப்பெற்றதாதலின் அவ ரது விளக்கத்தை ஆசிரியர் இவ் வாறு அழகுபொருந்த உரைத் தருளுவாராயினர்.

## மூர்த்தி நாயனர் நினைவு சந்தனப் பூச்சு

மதுரை சன 30-

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள் நந்தித்தம்பிரான் சுவாமிகளால் நிறுவப்பெற்ற மூர்த்தி நாயனர் நினைவு சொக்கலிங்கம் சந்தன மெய்ப்பூச்சு நிதியிலிருந்து 26-1-56 இரவு சொக்கலிங்கப் பெருமானுக்கும் அங்கயற்கண் அம்மைக்கும் சந்தனமெய்ப்பூச் சும் சிறப்புவழிபாடுகளும் நடை பெற்றன.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

அதற்குமாறாக அயற்சொற்கள் தம் கருத்துக்களையுந் தமிழிற் சேர்த்து அம்மொழியை வளப்படுத்துமென்க. சில தமிழ்ச் சொற்கள் வழக்கிழந்தனவாயின் அதற்குக் காரணம் வேறு. அயற்சொற்களால் தமிழ்ச்சொற்கள் வழக்கிழந்தனவாயின் ஒன்றிரண்டு சொற்களையாவது அவர் எடுத்துக்காட்டுக. பிறகு அவை பற்றி விசாரிக்கப்படும்.

அவர் இந்தி நுழைவையெதிர்ப்பவர். அதற்கவர் கூறுங் காரணங்கள் இரண்டு. 'ஒரு மொழி நுழைவால் அவன் (தமிழன்) மொழி பாதியளவு அழிந்துவிட்டது. அவனது பழைய பண்பாடும் இலக்கியச் சிறப்பும் மாசுண்டன. இவ்விரண்டு காரணங்களால்தான் தமிழன் இந்தி நுழைவைஎதிர்க்கிறான்' (14-8-55 தமிழ்நாடு) என்றது காண்க. அவர் கூறிய ஒருமொழியாவது சம்ஸ்கிருதம். அது செத்தமொழியென்பது அவர்கொள்கை. அது தமிழைப் பாதியளவுதானும் எப்படிச்சாகடிக்கும்? செத்த பாதி போகச் சாவாத பாதித்தமிழுக்குத்தான் தொல்காப்பியர் இலக்கணஞ் செய்தனரோ? பாதி செத்துப் பாதி சாவாத தமிழைச் செத்த மொழியென்பதா? சாவாத மொழியென்பதா? செத்த பாதியிது, சாவாத பாதி யிது என்பதை எப்படிக்காண்பது? இப்போது பத்தாயிரந்தனித்தமிழ்ச் சொற்களேசாவாமலிருக்கின்றன என்று வைத்துக்கொண்டால் செத்துப்போன தனித் தமிழ்ச் சொற்களும் சற்றேறத்தாழஅவ்வளவுதானே யிருக்கவேண்டும். அப்படியா? அச்சொற்களுக்கு அவரால் ஜாபிதாக் கொடுக்க முடியுமா? தமிழுக்கு அயலான கருத்துக்களுக்குத் தமிழிற் புதுச்சொற்களைச் சிருட்டிக்கும் முயற்சி நடந்துவருகிறது. கட்டிய சொற்களென்பனஅவையே. அவற்றைக் கட்டிய சொல்லாமாயிற் செய்யுள் வழக்காமாறில்லை' எனச் சேனாவரையர் கூறிக் கடிந்தார். ஆகலின் செத்த தமிழ்ச் சொற்களின் இடத்தை

அவை நிரப்பமாட்டா வென்க. அவ்விருப்பினர்தானே 'இருநூறுஆண்டுகளாக இருந்துவரும் ஆங்கிலத்தை இந்திக்குப் பதிலாக இருக்கச்செய்தலே அறிவுக்குப் பொருத்தமாகும்' (14-8-55 தமிழ் நாடு), 'நாம் செய்த நல்வினைப் பயனால் உலக அறிவுவளரத்தக்க ஆங்கில ஆட்சி ஏற்பட்டது. ஆங்கிலம் கற்ற பலபேர் உலகத்தையும் தன்னையும் அறியலாயினர்' (13-11-55) எனக்கூறி ஆங்கிலத்தையும், பாரத தேசத்தில் அது புரிந்த ஆட்சியையும் தாமலர் தூவித் தோத்தரிக்கிறார். சம்ஸ்கிருதத்தைச் செத்த மொழியெனச்சொல்லிக்கொண்டு அதனால் தமிழ் பாதியளவு செத்துவிட்டதென்றும், இந்தி நுழைவால் மற்றப் பாதியளவும் செத்துப்போகுமேயென்றுந் துயரப்படுகிற அவரது ஆங்கில மோகத்தின் அளவுதான் என்னே! சாவாத பாதித் தமிழும் அவ்வாங்கிலத்தால்மட்டுஞ் சாவாதோ? தமிழுக்கு ஆங்கிலம் சம்பந்தியா? பாரதியார் 'ஆங்கிலப் பயிற்சி' என்ற தலைப் பின்கீழ் ஒன்பது பாடல்கள் பாடியிருக்கிறார். ஆங்கிலத்தாலும் அதனாட்சியாலும் பாரத தேசமடைந்த அதிசோகநிலையின் வருணனையே அவை. தமிழகமும் அந்நிலைக்குத் தப்பவில்லை. அக்கவிஞர் கண்ட உண்மை எங்கே? இத்தனித் தமிழ் விருப்பினர் கொண்ட மயக்கம் எங்கே? உலகமே இன்பநிலையம், உடம்பே உயிர் எனக்கொண்ட பிராகிருதருக்கு ஆங்கிலம் உதவக்கூடும். ஆனால் உடம்புக்கு வேறாய் உடம்பினுள் உயிரென ஒன்றுண்டு, அது உலகையும் உடம்பையும் படைத்த முழுமுதற்கடவுளாகிய சிவபிரானது திருவடியின்பத்தைத் துய்த்தற்கே யுரியது என்னுந்தெள்ளறிவைத் தருவது சம்ஸ்கிருதமே யென்க. அத்தமிழ் விருப்பினரின் மயக்கம் அவ்வளவில் நிற்கவில்லை. 'வடமொழியின் உதவியில்லாமல் தெலுங்கு, கன்னடம் முதலிய மொழியாளர்களுக்கு வடமொழி சார்புடைய இந்தியைக் கற்றல் எளிதாக இருக்கலாம். ஆனால் வடமொழிச் சார்பற்ற தமிழனுக்கு அது பொறுக்கமுடியாத பெருஞ்சுமையாக இருக்கிறது' (14-8-55 தமிழ்நாடு) என்கிறார். தமிழனுக்குச் சம்ஸ்கிருதச் சார்பில்லாமையால் இந்தியைக்கற்றல் பெருஞ்சுமையெனின், ஆங்கிலத்தை எளிதிற் கற்றற்கு ஏதேனுமொரு சார்பு வேண்டும்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத தை - 20

# தாயுமானர் திருநாள்

தவஞானச் செல்வராகிய தாயுமான அடிகளது நினைவுநாள் 4-2-56 சனிக்கிழமையாகும். சோழநாட்டில் தோன்றிய அடிகளார், பாண்டிநாட்டுப் பழம்பதியாகிய இராமநாதபுரத் திருநகரத்தில் வந்து தங்கியிருந்துதான் சிவபரிபூரணம் பெற்றார்கள். எனவே, அவர்களுக்கு மற்றையோரைவிட நாம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

உலகத்திலே நிலவுகின்ற சமய கோடிகள் பலவற்றுள்ளும் மேம்பட்டு விளங்குவதாய், அவைபோல ஒன்றோடொன்று முரணியிகலும் தன்மை சிறிதுமில்லாததாய், முடிந்த நிலையுடையதாகி விளங்குகின்ற சுத்தாத்துவித சித்தாந்த சைவத் திருநெறியை நிலைநாட்டிய சிவஞானச் செல்வர்கள் பலருள், துறவுக்கோரெடுத்துக் காட்டாக விளங்கிய தாயுமானஅடிகள் முன்னணியில் நிற்பவராவார்கள்.

சோழநாட்டுத் திருமறைக்காட்டுத் திருப்பதியில், ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளுக்குமுன், பரம்பரைச் சைவவேளாளர் குடியினராய்க் கல்வி கேள்விகளால் முதிர்ந்து குருலிங்க சங்கம பத்தியுடையராய் வாழ்ந்திருந்த கேடிலியப்ப பிள்ளையென்பாருக்குச் சைவவுலகம் செய்த தவப்பயனாகத்

தாயுமான அடிகள் தோன்றினர்.

உரிய பருவத்தே கற்பன கற்றுக் கவினுடையவராய் விளங்கிய தாயுமானப் பெருந்தகை, அந்நாளில் திரிசிரபுரத்திலிருந்து ஆட்சி புரிந்த முத்துவிசயரகுநாத சொக்கலிங்க நாயகரது அரண்மனையில்சம்பிரதிஅலுவலராகப் பணிபுரியும் வாய்ப்பைப் பெற்றார்.

'காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலும், தாதிமனம் நீர்க்குடத்தேதான்' என்றபடி, அரசாங்க அலுவலராகப் பணிபுரிந்து வந்தபொழுதும் அவரது சிந்தை உண்மைநாடிக் காணும் ஒருமையில் இடைவிடாது முயன்று கொண்டிருந்தது. அந்த நன்முயற்சியின் பயனாகத் திருவருள் ஞானப் பெருஞ்செல்வப் பிழம்பாகிய திருமூலநாயனார் மரபிலே தோன்றி மெய்கண்ட பரம்பரையில் ஞானோபதேசம் பெற்ற மௌன குரு சுவாமிகளின் அருளுபதேசம் இவருக்குக்கிடைத்தது.

அந்த நல்லுபதேசத்தால் தானடைந்த பெருலாபத்தை அனைவரும் பெற்று உய்தல்வேண்டுமென்னும் பெருங்கருணைகொண்டு, அடிகளார் அருளிச்செய்த திருப்பாடல்கள் பல. அவற்றை ஓதி உணர்ந்து ஒழுகி இன்புறுவோமாக.

## மதமாற்றம்

*மதுரை சன 29-*

*சங்கரன்கோவில் தாலுகா பாரைபட்டி கிராமத்திலிருக்கும் ராயப்பன் மகன் ஆர் முத்துவும் பெரியகருப்பத்தேவர் மகன் அல்போன்ஸ்ஜெயராசும் இன்றுதிருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம் இளவரசு ஸ்ரீல ஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகளிடம் இந்து முறைப்படி தீட்சைபெற்று இந்துவாகி முறையே ஆர் முத்து, பி ஜெயராசு என்ற இந்துப்பெயர்களைப் பெற்றார்கள்.*

## சந்தா நேயர்களுக்கு!

*ஐயன்மீர்!*

*கடந்த புரட்டாசி வரையுள்ள தங்கள் சந்தாப்பாக்கிகளை அனுப்பித்தரும்படி 10-10-55ல் கார்டுகள் எழுதியும், அதன் பின்னர் நமது இதழ்மூலம் பல தடவைகள் வேண்டிக்கொண்டும் ஒரு சிலர் அனுப்பாமலேயே இருந்து வருகிறார்கள். மீண்டும் மீண்டும் அஞ்சல்செலவிற்கு இடம் வைக்காமல்பாக்கிகளை அனுப்பித்தரும் படிகேட்டுக் கொள்கிறோம்.*

*அன்புள்ள, அமைச்சர்.*




சிவஞானபோதம்:- ஸ்ரீ பாண்டிப்பெருமாள் விருத்தி, திருவாவடுதுறையாதீன வெளியீடு எண் 94. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளியபடி ஆதீன வித்துவான் திரு, த. ச. மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்களால் பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்துப் பதிப்பித்து இவ்வாண்டு ஐப்பசி 9ல் திருவெண்ணெய்நல்லூரில் நடைபெற்ற சித்தாந்த சைவ நான்காவது மாநாட்டு மலராக வெளியிடப்பெற்றது.

இரண்டாவது திருமந்திர மாநாட்டு மலர்:- திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் 95. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம், 11-1-56ல் ஆதீனக் கொலுமண்டபத்தில் நடைபெற்ற திருமந்திர மாநாட்டு நிகழ்ச்சிக் குறிப்புகளும், அறிஞர்பெருமக்களின் விரிவுரைக் குறிப்புகளும் இதில் அடங்கியுள்ளன.

திருமந்திரம்-சிவயோக சிந்தனை: திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் 96. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளியபடி ஆதீன வித்துவான் த. ச. மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்களால் வெளியிடப்பெற்றது. சிவயோக சாதனை முறையைத் திருமந்திரத்தின் வழியாக எளிதில் உணர்த்துவது இந்நூல்.

திருமந்திர முன்னுரை:- திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் 97. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம் ஆதீன மகா வித்துவான் ச. தண்டபாணி தேசிகரவர்கள் திருமந்திரத்தின் பிழிவாக இதனை வழங்கியிருக்கிருர்கள்.

திருமந்திர முன்னுரை (ஆங்கிலம்):- மேற்கண்ட எண் 97 வெளியீட்டின் ஆங்கில மொழிபெயர்ப்பு.

சைவ நன்மக்கள் பலகாலும் செய்த சிவபுண்ணியத்தின் பயனுகக் கிடைத்தற்கரிய ஞானக் கருவூலங்களை எளிமையிற் பெறும்படி செய்து வருகின்ற மகாசந்நிதானம் அவர்கள் பெருங்கருணைக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

குமரகுருபரன் ஆண்டு மலர்:- திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம்

அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித்தம்பிரான் சுவாமிகளது அருள்வளத்தையும் பொருள் வளத்தையும் பெற்று, ஸ்ரீகாசி மடம் இளவரசு வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகளது அருட்கட்டுரைகளையும் மற்றைச் சைவப் பேரறிஞர்களது பொருட்கட்டுரைகளையும் தாங்கி வெளிவரும் திங்கள் வெளியீடு, தனது ஆறு ஆண்டு நிறைவை நினைவூட்டி ஆண்டுமலராக வெளிவந்துள்ளது. மலரின் முகப்பில் ஸ்ரீகாசி மடம் அதன் தலைவர், ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் ஸ்ரீமத் இளவரசு சுவாமிகளது திருவுருவப்படங்கள் திகழுகின்றன. சமயப் பேருண்மைகளைத் தக்க நல்லறிஞர்களின் கட்டுரைகள் வாயிலாக வெளியிட்டுவரும் இத்திங்களிதழின் ஆண்டுச்சந்தா ரூ 1-8.0 குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம், திருநெல்வேலி ஜில்லா.

திருப்பள்ளி எழுச்சி விழா

மார்கழித் திங்கள் எல்லா நாட்களிலும் அதிகாலையில் தோவாளையில் அன்பர்கள் வீதி வலம்வந்து திருப்பள்ளிஎழுச்சி பஜனை பாடினர். இதன் இறுதியாக தை மாதம் 1ம் 2ம் நாட்களில் இரவு பஜனைவிழா சிறப்பாக நடைபெற்றது. முதல்நாள் விழாவில் நாகர்கோவில் திரு சி. வள்ளிநாயகம்பிள்ளை தலைமையில் திரு ஆ தவசியும் வித்துவான் திரு வே பூதலிங்கம்பிள்ளையும் சொற்பொழிவுநிகழ்த்தினர்; திருவனந்தபுரம் சாவித்திரிஅன் பார்ட்டி இசைக்கச்சேரி நடந்தது. இரண்டாம்நாள் விழாவிற்கு திரு புலவர் யு கே சுந்தரம்பிள்ளை தலைமை வகித்தார். அவர்களுடைய 'சீதாகல்யாணம்' என்னும் அரிகதையும் பேபி மாரியின் திருவாதிரைக் களியும் விழாவைச் சிறப்பித்தது.

செங்கோல் ஆதீனம்

பெருங்குளம் சன 12-

செங்கோல் ஆதீனம் தேவாரப்பாடசாலை மாதாந்திரக் கூட்டு வழிபாடு ஸ்ரீ ல ஸ்ரீ ஆறுமுக சுந்தரசத்திய ஞானபரமாசாரிய சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. சுவாமிகள் தேவாரதிருவாசக தத்துவம் பற்றி விளக்கமாய் விரிவுரை ஆற்றினர்கள். திருப்பாவை திருவெம்பாவை களிலும் சில பாட்டிற்குப் பொருள்கூறி இவைகளை மக்கள் யாவரும் பாராயணம் செய்யவேண்டுமெனக் கூறி முடித்தார்கள். சூரிய நாராயணன் என்றமாணவர் 'சமயம்' என்பது பற்றிப்பேசினர். சிவபுராணம் ஓதப்பட்டபின் கூட்டம் முடிவுற்றது.

## பெருந் தலைவர்களின் ஒருமித்த தீர்மானம்

சென்னை சன 29-

தமிழ்க்கலைமன்றத்தின் அழைப்புக்கிணங்க திரு, சி. இராசகோபாலாச்சாரி, திராவிடக்கழகத் தலைவர் ஈ. வெ. இராமசாமி, திராவிடமுன்னேற்றக் கழகத் தலைவர் திரு, சி என் அண்ணாதுரை, தமிழரசுக் கழகத்தலைவர் ம. பொ. சிவஞானம் ராஜா சர் முத்தையாசெட்டியார் ஆகியோர் மத்திய அரசாங்க மொழிப்பிரச்சினை பற்றி இன்று இங்கு கூடிப்பேசினார்கள்:

மத்திய அரசாங்க அலுவல் மொழியாகவும் மாகாணங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்கும் இடையேகடிதப் போக்குவரத்து மொழியாகவும் ஆங்கிலமே தொடர்ந்து இருந்துவரவேண்டுமென்று இப்பேச்சுக்களின் விளைவாக முடிவு செய்யப்பட்டது. மன்றத்தின் விசேட அழைப்பின் பேரில் டாக்டர் முவரதராசனார், பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை, திருப்புகழ்மணி கிருஷ்ணசாமிஐயர் ஆகியோர் உடனிருந்தார்கள்.

தலைவர்கள் செய்துள்ள இம்முடிவு மனு உருவத்தில் மத்திய அரசாங்க மொழிக் குழுவிற்கு (பி ஜி கெர் குழுவுக்கு) அனுப்பிவைக்கப்படும்.

## ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

ஈத்தாமொழியின் அண்மையிலுள்ள கொடிக்கால் கிராம ஸ்ரீராமகிருஷ்ணமடத்தில் அந்தர்யோகவிழா 16-2-56 இரவு திரு, எஸ். தங்கவேல் நாடார் பி ஏ அவர்கள்தலைமையில்நடைபெற்றது. இசைவாணர்கள் திருவாளர்கள் ரெத்தின சுவாமி நாடார், மகாராஜன்ஆசாரி, குற்றாலம்பிள்ளை ஆகியோருடைய நாமாவளி, தனிப்பாடல், பஜனை நடைபெற்றது. ஆசிரியர்கள் திருவாளர்கள் தங்கநாடாரும் ஆண்டிநாடாரும் வழக்கறிஞர் திரு சி வள்ளிநாயகம் பிள்ளையும் சமயநல்லுரைகள் ஆற்றினர். ராமகிருஷ்ணபரமஹம்ஸரின் சில உபகதைகளைத்தலைவர்வாசித்துக் கருத்து விளக்கினர்.

## தங்கம், வெள்ளி

மதுரை சன 31

| | | | |
|---|---|---|---|
| பாட்லா | 96 | 0 | 0 |
| சவரன் | 62 | 4 | 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 61 | 8 | 0 |
| வெள்ளி 100தோலா | 179 | 0 | 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 13 | 0 |

# ஹென்ரி போர்டு

( ஜி. என். ராதாகிருஷ்ணு )

நாற்பது வயதாகுமுன் ஹென்ரி போர்டு மிகவும் சாதாரணமானவர். ஆனுல் அவர் தமது ஐம்பதாவது வயதில் உலகத்திலுள்ள பெருஞ் செல்வர்களோடும் மிகப் பெரியவர்களோடும் நெருங்கிப் பழகக்கூடியவராஞர். அவர் வாயினின்று பிறந்த ஒவ்வொரு சொல்லையும் அது புகைபிடிப்பது பற்றிய தாயினும், விவாகரத்துப் பற்றியதாயினும், தற்கால நாட்டியம்பற்றியதாயினும் பத்திரிகைகள் வெளியிடலாயின. 'சரித்திரம் என்பது வெறும் எய்ப்பேயாகும்' என்று ஒருமுறை அவர்சொல்லிவிட்டார். அது பற்றிப் பெரிய விவாதம் ஏற்பட்டது; காலஞ் செல்லச் செல்லத்தான் அவ்விவாதம் மறைந்தது.

ஹென்ரி போர்டின் நாற்பது வயதுக்கும் ஐம்பது வயதுக்கும் உட்பட்ட காலம் அவரதுவாழ்க்கையில் முக்கியமானது. அக்காலத்தில் மோட்டார்த்தொழில் மிகவும் வளர்ச்சியுற்றது. அக்காலத்தில் அவர் துணிந்து எண்ணிஞர், சோதனைகள் செய்து பார்த்தார், வெற்றிகண்டு மகிழ்ந்தார். அதன் காரணமாகவே முற்போக்கான உற்பத்திக் காலம்ஆரம்பமாயிற்று. ஹென்ரி போர்டு உற்பத்தித் துறையில் முதன்மையானவராக விளங்கிஞர்.

ஹென்ரி போர்டு 1863, ஜுன் 30ம் தேதி மிச்சிகளில் பிறந்தவர். காஸ் என்ஜின் மெக்கானிக்காக இருந்தவர் பலகோடி டாலர்மதிப்புள்ள தொழிலுக்குச் சொந்தக்காரராஞர். அவர் தன்னம்பிக்கையும் மனத்திண்மையும் உள்ளவர்; ஆதலால், அவரது முயற்சிகளுக்கு எத்தகைய முட்டுப்பாடும் நேரவில்லை. அவர் தமது உறுதியாலும் கூர்ந்த மதியாலும் இடர்ப்பாடுகளையெல்லாம் வென்ருர். இதற்கு அவரது வாழ்க்கையில் பல உதாரணங்கள் காட்டலாம்.

சரியானகூலியும், சரியானவிலையும்

1914ல் ஒரு ஞாயிற்றுக்கிழமை நாளொன்றுக்குக் குறைந்த கூலி 5டாலர் என்றும் ஒன்பதுமணியயிருந்த வேலையை எட்டு மணி ஆக்கியாயிற்று என்றும் அவர் அறிவித்தார். அத

னால் அமெரிக்கா முழுவது முள்ள மக்களைக் கவர்ந்துவிட்டார். அக்காலத்தில் நாளொன்றுக்குக் கொடுக்கப்பட்டது 2 டாலர்தான். வேலைகொடுப்போர் டெட்ராயிட் நகரிலிருந்து போய் விடுவர், அல்லது நஷ்டப்பட்டுப் போவர்; அதனால் டெட்ராயிட் பாழாகி விடும் என்று சொன்னார்கள். கூலியைக் கூட்டினால் வேலை செய்வோருடைய வாங்கும் சக்தி அதிகமாகும். அவர்களது வாங்கும் சக்தி அதிகமானால், மற்றவர்களது வாங்கும் சக்தியும் அதிகமாகும். இவ்வாறு ஒன்றையொன்று சார்ந்து வாங்குவதும் விற்பதும் அதிகமாகிக்கொண்டே போகும். இதுவே ஹென்ரி போர்டின் கருத்து.

அவர் செய்துபார்த்த இந்தச் சோதனை மிகவும் வெற்றியாக விளங்கியது. எனவே, ஐந்து ஆண்டுகளுக்குப் பின் நாளொன்றுக்குக் குறைந்த சம்பளம் 6 டாலராக உயர்த்தப்பட்டது. சரியான கூலி, சரியான விலை என்பவையாவை என்று ஹென்ரி போர்டு பின்வருமாறு சொன்னார்:

'சரியான விலை என்பது வாங்குபவன் தாங்குவான் என்பதைக் கருதிக் குறிப்பதன்று. சரியான கூலி என்பது ஒருவன் எவ்வளவு குறைந்த காசுக்கு வேலை செய்வான் என்பதைக் கண்டு நிர்ணயிப்பதன்று. விற்றுக்கொண்டேயிருப்பதற்கு ஒரு பொருளுக்கு வைக்கக் கூடிய குறைந்த தொகையே அதன் சரியான விலை. வேலை செய்பவனுக்கு முதலாளி ஒழுங்காகக் கொடுக்கக்கூடிய உயர்ந்த சம்பளமே சரியான சம்பளம்'

ஒரு புது முறை:

மோட்டார்க் காரின் பலபகுதிகளைச் செய்து அவற்றைஇணைத்துக்கார் ஆக்குவதற்கு ஹென்ரி போர்டு ஒரு புது முறையைக் கையாண்டார். அம்முறை பொருள் உற்பத்தித் துறையில் ஒரு புரட்சி உண்டாக்கியது. மோட்டார்க்காரின் பகுதிகளை இணைக்கவேண்டியஒழுங்குப்படி தொகுத்து வைத்திருப்பார்கள்; எல்லாப் பகுதிகளையும் ஒரே இடத்தில் பொருத்துவதில்லை; தொழிலாளிகள் இடம் விட்டு நகர்வதில்லை; உருவாகும் கார் தான் அந்தந்தப் பகுதியைப் பொருத்தும் தொழிலாளி இருக்கும் இடத்திற்கு நகர்ந்துவரும்'

(தொடரும்)

## உங்களுக்குத் தெரியுமா?

கடற்கரையோர வெளிநாட்டு வர்த்தகத்துக்கு வேண்டிய கப்பல்களை வாங்குவதற்காகக்கப்பல் கம்பெனிகளுக்கு இதுவரை இந்தியசர்க்கார் ரூ 20கோடி கடன் வழங்கியிருக்கின்றனர்.

பருத்தி உற்பத்தி 1950-51ல் 29லட்சம் பேல்களாக இருந்தது 1954-55ல் 43 லட்சம் பேல்களுக்கு உயர்ந்தது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் விவசாய ஆராய்ச்சி, அபிவிருத்தித் திட்டங்களுக்கு ரூ 38கோடி செலவு செய்யப்படும்.

வருஷா வருஷம் இந்தியாவில் மெட்ரிகுலேஷன் பாஸ் செய்யும் மூன்று லட்சம் மாணவர்களுக்கு மேற்பட்டவர்களில் 50 சதவிகிதத்தினர்தான் கல்லூரிகளில் சேருகிறார்கள்.

இந்தியா இப்பொழுது நாற்பது நாடுகளுடன் ரேடியோசெய்திப் போக்குவரத்து சர்வீஸ் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது; இவற்றில் 34நாடுகள் சுதந்திரம் அடைந்ததற்குப் பின்னர் ஏற்படுத்தப்பட்டவைகள். இவைகளில் கம்பியில்லாத் தந்தி, ரேடியோ டெலிபோன், ரேடியோ போட்டோ சர்வீஸ்கள் ஆகியவை சேர்ந்திருக்கின்றன.

இந்தியாவில் பவர் ஆல்க்கஹாலின் உற்பத்தி 1946-ல் 23லட்சம் காலன்களாக இருந்தது, 1954-ல் 80லட்சம் காலனுக்கு உயர்ந்தது. 1955ம் வருஷத்தில் இதன் உற்பத்தி 100 லட்சம் காலனாக இருக்குமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

1955 அக்டோபரில் இந்தியாவில் புதிதாக ஏற்பட்ட தொழில் துறைத் தகராறுகளின் எண்ணிக்கை 79க்குக் குறைந்துவிட்டது; முந்திய மாதத்தில் இதன் எண்ணிக்கை 89ஆக இருந்தது. இத்தகராறுகள் 78ல் சம்பந்தப்பட்ட தொழிலாளர்களின் எண்ணிக்கை 21,616; செப்டம்பரில் இவர்களின் எண்ணிக்கை 24,125

பம்பாய், கல்கத்தா, டில்லி, சென்னை ஆகிய விடங்களில் நிர்மாணிக்கப்பட்டிருக்கும் சிறு தொழில்கள் பிராந்திய சேவா நிலையங்களிடமிருந்து இதுவரை

சிறிய தொழில் ஸ்தாபனங்கள் 500க்கு மேற்பட்டவை தொழில் நுட்ப ஆலோசனை பெற்றிருக்கின்றன. 400க்கு மேற்பட்ட தொழில்கள் இந்நிலையங்களிலிருந்து வேறுவிதமான உதவிகளைப் பெற்றிருக்கின்றன.

இந்திய சர்வகலாசாலைகளிலிருந்து, இப்பொழுது வருஷத்துக்கு 3000 பேர்வீதம் என்ஜினியரிங் பட்டம் பெற்றுவருகின்றனர். 1950ம் ஆண்டுக்குமுன்பு சுமார் 1000 பேர்வீதமேபெற்று வந்தனர்.

இந்தியாவில் 1955ம் ஆண்டில் உற்பத்தியான நிலக்கரியின் மொத்த அளவு 3.8கோடி டன்னுக்கும் அதிகம் என்று மதிப்பிடப்படுகிறது. இது, 1950ம் ஆண்டின் உற்பத்தியைக்காட்டிலும் 60லக்ஷம்.டன் அதிகமாகும்.

இந்தியாவின் மொத்த வர்த்தகத்தில், நான்கில் ஒரு பகுதி, நாட்டின் விஸ்தாரமான கரையோரம் நெடுகப் பரவியுள்ள சிறிய துறைமுகங்களின் வழியாக நடைபெற்றுவருகிறது.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ், கல்வி ஸ்தாபனங்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதற்காகவும், கல்வி முறையைச் சீரமைப்பதற்காகவும், இந்திய சர்க்கார், பல்வேறு ராஜ்யங்களுக்கு மொத்தம் 17.9 கோடி ரூபாய் வழங்கியது.

இந்தியாவில், உள்ள 316 ஜில்லா தலைமைக் காரியாலயங்களில், 306ல் டெலிபோன் வசதிகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

---

## தர்ம சேவா சங்கம்

அகில பாரத ஆர்ய தர்ம சேவாசங்கத்தின் ஆதரவில் 12-1-56 மாலையில் நாகர் கோயில் சித்திரா ஹிந்துமத நூல் நிலையத்தில் ஸ்ரீ சுவாமி துருவானந்த ஸரஸ்வதி ஹிந்துதர்மம் என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினர். ஸ்ரீ எஸ். சிவராமகிருஷ்ண ஐயர் தலைமை தாங்கினர்.

---

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-17
மன்மத - தை-27
9-2-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## குறிஞ்சி

வரையாது வந்தொழுகுந் தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி ஆற்றுளென்பதைத் தோழி சொல்லியது.

கல்லாக் கடுவ னடுங்கமுள் ளேயிற்று, மடமா மந்தி மாணா வன்பறழ், கோடுயே ரடுக்கத் தாடுமழை யொளிக்கும், பெருங்கன் னாடனை யருளினை யாயி, னினியென கோள்ளலை மன்னே கோன்னேன்று, கூறுவன் வாழி தோழி முன்னுற, நாருடை நெஞ்சத் தீரம் போத்தி, யான்றோர் சேன்னெறி வாழாச், சான்றோ னாதனற் கறிந்தனை தேரிமே. 233

:-அஞ்சிலாந்தையார்

தோழீ! வாழ்வாயாக. தன்தொழிலையன்றி மற்றவற்றைக் கல்லாத கடுவன் நடுங்கும்படி முட்போன்ற கூரிய எயிற்றையுடைய இளமையான கரிய மந்தி தனது மாணாத சிறிய வலிய பிள்ளையோடு முடியுயர்ந்த மலையிலியங்குகின்ற மேகத்தினிடையே ஒளிக்கின்ற பெரிய மலைநாடன்பால் காதல்மிக்கு அருளுடையையாயினை. இதனை ஆராயும்பொழுது இனி எனது சொல்லை ஏற்றுக் கொள்ளமாட்டாய். எனினும் ஒன்று சொல்லுவேன். இதன் முன்னே அன்புடைய உள்ளத்திலே அருள்கொண்டு மேலோர் செல்லும் நெறியிலே சென்று வாழாத சான்றோனல்லனாதலை நீ நன்றாக அறிந்து தெரிந்துகொள்வாயாக.

# இந்திய வாத்தியக் கருவிகள்

இந்தியாவில் சங்கீதம் தெய்வீகக் கலையாகவே பாவிக்கப்பட்டு வந்திருக்கிறது. பிரம்மா தான் சங்கீதத்தைச் சிருஷ்டித்ததாகக் கூறப்படுகிறது. கடவுளரும் தேவியரும் சங்கீதத்துடனும் நடனத்துடனும் தொடர்பு கொண்டவர்களாகவே கருதப்பட்டும் வந்திருக்கிறது. குறிப்பிட்ட சில கடவுள்கள் குறிப்பிட்ட சில வாத்தியங்களின் கர்த்தாக்களாகவோ அதிபர்களாகவோ குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள்.

நடராஜர் நடனத்துக்கும் அதிபராகக் கருதப்படுகிறார். சிவனுடைய பல பெயர்கள் சங்கீதத்துடன்தொடர்புள்ளவையாகஇருக்கின்றன. ருத்ரன் வாசித்தவாத்தியத்திற்குருத்ரவிணைஎன்றுபெயர்.அவர்கையிலுள்ள உடுக்கை 'டமரு' என்று குறிப்பிடப்படுகிறது. நாதத்துக்கெல்லாம்ஆதாரமான ஆகாச தத்துவத்தை அது குறிப்பிடுவதாகச் சொல்லப்படுகிறது. விஷ்ணுவுக்கும் புல்லாங்குழலுக்கும் உள்ள தொடர்பும் குறிப்பிடப்படுகிறது. கிருஷ்ணனின் குழலோசைக்கு ஏற்றபடி கோபியர் இயற்கைத் தத்துவங்களின் சக்திகள்-நடனமாடினர். சரஸ்வதி சதா வீணையும் கையுமாக இருப்பதுடன் சகல கலைகளுக்கும் இறைவியாகவும் கருதப்படுகிறாள்.

இந்திர லோகத்தில் சங்கீதத்துக்கு அதிதேவதைகளான கந்தருவரும், கின்னரரும், வித்தியாதரரும், நாரதர், தும்புரு, விஸ்வாவசு முதலிய முனிவர்களும் இருந்ததாகக் கூறப்படுகிறது. சங்கீதத் துறைகளைப் பற்றிக் கூறும் முதல் நூல்கள் எல்லாம் அனேகமாக அவர்களின் பெயராலேயே வழங்கி வருகின்றன.

**600க்கு மேற்பட்ட வாத்தியக் கருவிகள்**

இந்தியாவின் நீண்ட காலச் சரித்திரத்தில் எத்தனையோ

வகை வகையான வாத்தியக் கருவிகள் உபயோகத்திலிருந்து வந்திருப்பதாகத் தெரிய வருகிறது. வெகு சாமானியமான கருவிகள் முதல் மிகவும் நுட்பம் வாய்ந்த கருவிகள் வரையில் 600க்கு மேற்பட்ட வாத்தியங்கள் உபயோகத்திலிருக்கின்றன. ஒவ்வொன்றும் தனித் தனிப் பெயர், உருவம், அமைப்பு, உபயோகமுறை, நாதவேறுபாடுமுதலியவை உள்ளவையாக இருக்கின்றன.

தோல் கருவிகளும், துளைக் கருவிகளும், நரம்புக் கருவிகளும் ஆகிய அவை பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக உபயோகித்துத் தேர்ந்தவையாக உள்ளன. கால வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல் மறைந்துவிட்ட பல இசைக்கருவிகள் பற்றியும் நாம் தெரிந்திருக்கிறோம். ஆதி காலத்திலிருந்த அதே ரூபத்தில் மாருமலும் அழியாமலும் இருந்துவருகிற கருவிகளும் இருக்கின்றன.

## புராதனக் கருவிகள்

பழந்தமிழ் நூல்கள் பேரியாழ், சகோட யாழ் என்று எத்தனையோ வகையான யாழ் வகைகளை விவரிக்கின்றன. அம்புஜா, ஆலாபினி, பரிவர்த்தனி, விபாஞ்சி, சித்தார. கச்சபி, மத்தகோகிபா முதலிய பழைய நந்திக்கருவிகள் இப்போதில்லை. வீணை, சித்தார், கோட்டுவாத்தியம், விசித்திர வீணை, சரோட், சாரங்கி, எஸ்ராஜ் முதலிய தந்திக்கருவிகள் தான் இப்போது வழக்கிலிருக்கின்றன. வயலின் அல்லது பிடில் மேனாட்டுவாத்தியம். இப்போது மிருதங்கம், தபேலா, கஞ்கிரா, முதலியவை பிரதான தோல் கருவி களாகத் தாளக்கருவிகளாக விளங்குகின்றன. முன்காலத்தில் உடுக்கை, இடக்கை, முழவு, திமிலை, பறை, துடி, தண்ணுமை, மத்தளம் முதலிய எத்தனையோ தோல் கருவிகள் இருந்ததாகத் தமிழ் நூல்கள் கூறுகின்றன. பதஹா, முராஜா, பேரி, துந்துபி முதலிய தோல் கருவிகள் இந்தியாவில் இருந்ததாக அறிகிறோம்.

இவைகளின் உருவம், அமைப்பு, பெயர் முதலியவைகளைத் தெரிந்துகொள்வதற்குப் பண்டைய இலக்கியங்களையும், சிற்பங்களையும், சித்திரங்களையும் தான் ஆராய வேண்டும். வேதங்கள், உபநிஷதங்கள், புராண இதிகாசங்கள் முதலியவைகளில் அவை பற்றிய குறிப்புக்க

லேக் காணலாம். பரதரின் நாட்டிய சாஸ்திரம், சாரங்க தேவரின் சங்கீத ரத்னாகரம், முதலிய நூல்களில் அவைகளின் விவரங்களைக் காணலாம். காளிதாசரின் காவியங்கள், நாடகங்கள் முதலியவைகளிலும் தமிழில் சிலப்பதிகாரத்திலும் தெலுங்கில் பால்குருகி சோமநாதர் இயற்றிய நூல்களிலும் இசைக் கருவிகள் வர்ணனைகள் இருக்கின்றன. மொகலாய மன்னர் காலத்திலிருந்த வாத்தியக்கருவிகள் பற்றியும் அபுல் பசலின் 'அய்னி அக்பரி' என்னும் நூலில் குறிப்பிடப்படுகிறது.

புராதன நூல்களிலும் சிலப்பதிகாரத்திலும் இசைக் கருவிகளின் வர்ணனைகள் வெகு நுட்பமாக அமைந்துள்ளன. அதோடுகூட அவைகளைஇசைப்பவர்களின் இருக்கைமுறை, அவைகளைக் கையாளும் விதம் முதலிய எல்லாம் நமக்கு ஆச்சரியமூட்டும் முறையில் வெகு துல்லியமாக விவரிக்கப்பட்டிருக்கின்றன. சிதம்பரம், மதுரை முதலிய தென்னிந்தியக்கோயில்களிலும், நாகார்ஜுன கொண்டா, சாஞ்சி, அமராவதி, காந்தாரா, மதுரா, பாக், பார்ஹத் முதலிய இடங்களிலும் வீணை, யாழ், குழல், மத்தளம், தாளம், மணி முதலியவைகளின் உருவங்களைச் சிற்பங்களிலும் சித்திரங்களிலும் காணலாம். தஞ்சாவூர், அஜாந்தா, பாக் ஆகிய இடங்களிலுள்ள சுவர்ச் சித்திரங்களில் அவைகளை விசேஷமாகக் காணலாம்.

### கல்கத்தாக் காட்சிச்சாலை

இந்திய வாத்தியக்கருவிகளின் சிறந்த தொகுப்பைக் கல்கத்தாவிலுள்ளபொருட்காட்சிச் சாலையில் காணலாம்.

வாய்ப்பாட்டுத்தான் இந்தியாவில் விசேஷமாக இருப்பினும், வாத்தியங்களுக்கும் விசேஷ முக்கியத்துவம் இருக்கிறது-பக்க வாத்தியங்களாக அமைந்துள்ள கருவிகள் விஷயத்திலும் கூட, அவைகளைத் தனி ஆவர்த்தனம் செய்து காட்டுவதற்கும் சந்தர்ப்பம் அளிக்கப்பட்டுத்தான் வருகிறது. சில கருவிகள் விஷயத்தில் தனிக்கச்சேரிகள் கூட நடத்தப்படுகின்றன.

இந்திய சங்கீதம் இன்னிசை சங்கீதமாக, ராக இசையாக அமைந்துள்ளபடியால் 'ஆர்க்கெஸ்ட்ரா' பாணியில் ஒரே கூட்டமாக அவைகளைச் சேர்த்து வாசிக்கும் முறை அபி

விருத்தியடையவில்லை. ஆனால் சில கருவிகள் சேர்த்தே வாசிக்கப்படுகின்றன. ஊர்வலங்கள், விழாக்கள், பவனிகள் முதலியவைகளில் மேளங்கள் வாசிக்கப்படுகின்றன. புத்தருக்கு 'சப்த பூஜை' செய்யப் படும்போது வீணையும் சிறிய மத்தளங்களும் புல்லாங்குழலும், இரட்டை மத்தளமும் ஜாலராவும் சேர்த்து இசைக்கப்படுகின்றன. அசோகர் வெளியே போகும்போதெல்லாம் வாத்திய கோஷ்டி ஒன்று கூடவே சென்றதாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

குப்தர் காலத்தில் நாடக அரங்கிலும் வீணை, குழல், மிருதங்கம், புஷ்கரம், முரஜ, துரியா, சங்கம், துந்துபி, கண்டா முதலியவை உபயோகிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

யுவான் சுவாங் முதலியவெளிநாட்டு யாத்ரீகர்கள் 7ம் நூற்றாண்டில் உபயோகத்திலிருந்த இசைக்கருவிகள் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள். பாணுதம் காவியத்தில் சங்க துந்துபி, முராஜா, வேணு, வீணை, ஜில்லரிகா, தாளா, கஹாலே முதலியவற்றைக் குறிப்பிட்டிருக்கிறார். மன்னர் (ஹர்ஷர்) குளிக்கச் செல்லும்பொழுது சிரிங்கா, வீணை, பேரிகை, ஜாலராபோன்றவை முழங்கும் என்றும் கூறியிருக்கிறார்.

மொகலாயர் காலத்தில் 'நல்பத்' என்று குறிப்பிடப்படுகிற ஒன்பதுவகைவாத்தியக்காரர்கள் இருந்ததாகத் தெரிகிறது. அவர்கள் கோபுர மேடைகளிலிருந்து வாத்தியம் வாசித்தார்கள். அக்பர்காலத்தில் இருந்த 'நாக்கர் கானவில்' குர்கா, நக்காரா, டோல், சுர்ணய், நபீரி, கர்ண, சிரிங்கா ஜானி முதலியவை இருந்தன.

தற்காலத்தில் உதய சங்கர் அல்மோராவில் உள்ள தன் நடனநிலையத்தில் 'ஆர்க்கெஸ்ட்ரா' வாத்திய கோஷ்டியை ஏற்படுத்தியிருக்கிறார். அகில இந்திய ரேடியோவும் 'ஆர்க்கெஸ்ட்ரா' வாத்திய கோஷ்டி அமைப்பை உருவாக்கி வருகிறது. டி கே ஜயராமஜயர், ரவிசங்கர் ஆகியோர் நடத்தி வருகிற 'வாத்திய விருந்தா' ரேடியோ ரசிகர்களுக்கு நன்கு தெரிந்தவைதான். சிலர் அவைகளை வெகுவாக ரசித்துவருகிறார்கள்.

இப்புதிய ஏற்பாடு நன்கு ஸ்தாபிதமாவதற்கு இன்னும் நன்றாய் ஆராய்ச்சிகள் நடத்த வேண்டும்.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்த பண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

அஃதெது? எதுவுமில்லை. ஆகலின் ஆங்கிலங் கற்றலும் அவனுக்குப் பெருஞ்சுமைதான். தமிழன் வடமொழிச்சார்பற்றவனல்லன். அச்சரர்பிலிருந்து அவன் இடையில் விலகினான். அதனாலேயே தமிழ் நூல்களில் சம்ஸ்கிருதச் சொற்கள் அவ்விருப்பினர் கலங்கு மளவிற்குக் கலக்கலாயின.

சம்ஸ்கிருதம் வடமொழியெனப்பட்டது. வடமொழியென்பது தமிழரிட்ட பெயர். ஏனிட்டனர்? பாரதத்தில் தமிழகம் தென் கோடியிலுள்ள மிகச் சிறியபகுதி. வடக்கிலுள்ள மற்றப்பகுதி மிகப் பரந்தது. அதனால் தமிழர் மிகச் சிறு தொகையினரும், அப்பகுதியினர் மிக்பெருந் தொகையினருமாவர். தமிழரத்தனை பேருமே சம்ஸ்கிருதங் கற்றிருந்தாலும் அக்கல்வியுடையார் மிகச்சிலரென்ற அளவிற்றான் அடங்குவர். மற்றப்பகுதியில் சனத்தொகை அதிகமாகலின் அதற்குத்தக அக்கல்வியுடையாரும் அதிகமிருக்க முடியும். அவ்வதிகம்பற்றி அம்மொழி பண்டைத் தமிழரால் வடமொழியெனப்பட்டது. அஃதெது போலும்? சம்ஸ்கிருதத்தை மண்ணுலகத்து மக்களும் பயில்வர், விண்ணுலகத்துத் தேவரும் பயில்வர். ஆயினும் அதற்குத் தேவபாஷையென்றே மற்றொரு பெயருமுண்டாயிற்று. அம்மொழி பயில்வாருள் மக்களைக் காட்டிலுந் தேவரே பெருந்தொகையினர். அவ்வதிகம்பற்றி அம்மொழி தேவபாஷை யெனப்பட்டது. அதுபோலுமாம். ஆகவே வடமொழி, தேவபாஷை யென்பன அம்மொழிப் பயிற்சியுடையாரின் மிகுதி பற்றி உளவாய பெயர்களே யென்க. அன்றியும் அம்மொழிக்குரிய லிபிகள் இரண்டுவகை. அவற்றுள் ஒன்று கிரந்தலிபி. மற்றொன்று நாகரலிபி. கிரந்த லிபியே ஓலையில் எழுதுதற்கு ஏற்றது. ஆகலின் அதுவே அம்மொழிக்குரிய புராதன எழுத்தென் றறியப்படும். அந்த லிபி தமிழெழுத்தோடு பெரிதும் ஒத்

தது. அதுவே பாரதமெங்கும் சம்ஸ்கிருதத்துக்கு லிபியாயிருந்துவந்தது. வடபாரதத்தினர் அம்மொழியை விடவில்லை. ஆனால் இடைக்காலத்தில் அந்த லிபியை நீக்கி நாகரலிபியைக் கொண்டனர். கிரந்தலிபி மீண்டும் இத்தேசமெங்கும் பரவ வேண்டும். அதனைப் பரப்புதற்குரியார் தமிழரே. ஆனால் அவர் திறமை நவீனரின் வஞ்சப் பிரசாரத்தால் பறிக்கப்பட்டுப் போயிற்று. அவ்வெட்கக் கேட்டை அவர்உணர்ந்துபோக்கிக்கொள்ளவேண்டும். அந்நாள் விரைந்து வருக. தமிழகம் கிரந்தலிபியை வைத்துக்கொண்டது. ஆனால் அம்மொழியையே விட்டுவிட்டது. என்னே அவ்வகுத்துப் பேதமையின் உச்சம்! பண்டைத் தமிழர் அந்தலிபியில் அம்மொழியைப் பயின்று வந்தனர். அதனால் அம்மொழியுந் தமிழகத்துக்கே சொந்தம் போலுமென்ற மயக்கம் உண்டாகலாம். அதைத் தவிர்க்கவேண்டாமா? அதற்காக அவர் அம்மொழியை வடமொழி யென்றார். வடமொழியுமாமென்பது கருத்து. ஆனால் அப்பெயருக்கு வடநாட்டுமொழி, அங்கிருந்து தமிழகத்துக்கு வந்தமொழி யெனப் பொருள் கூறிவருகிறார் நவீனர். அதற்குச் சாத்திர பிரமாணங்கிடையாது. இன்னும் அம்மொழிக்கு வடசொல் என்பதுபோல் வடதமிழ் என்றும் பெயருண்டு. வடசொல், வடதமிழ் என்ற இரண்டையும் எடுத்துக்காட்டி அவற்றிற்குக் கிரந்த மொழியெனப் பொருள் கூறியிருப்பதை யாழ்ப்பாணம் நா. கதிரைவேற்பிள்ளையவர்கள் தொகுத்துப், பி. சிதம்பரமுதலியாரவர்கள் தமது வித்தியாரத்நாகர அச்சியந்திரசாலையில் 1899இல் பதிப்பித்த ‘தமிழ்ப் பேரகராதி’யிற் காண்க. பண்டைத் தமிழர் சம்ஸ்கிருதத்தை வடதமிழ் எனக்கூறிப் பாராட்டியதை நவீனர் உணரவல்லாரா?

இதுகாறுங் கூறியவாற்றால் தமிழ்ச்சாராரே உளர், சம்ஸ்கிருதத்துக்கெனத் தனிப்பட்ட சாரார் எவருமிலர் என்பது ஓரளவு விளக்கப்பட்டது. படவே, ‘இருசாராருக்கும்’ என நவீனர் கூறியது பிழையாதல் காண்க. சம்ஸ்கிருதம் பாரத தேசத்தாரனைவரையும் ஒரு சாராராகவே தொன்றுதொட்டு ஆக்கிவைத்திருக்கிறது. இருசாராரென்பது கற்பனை. நவீனரே அப் பிளவையுண்டாக்குகின்றனர்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

மன்மத தை - 27

# திலகவதியார் திருநாள்

சமயகுரவராகிய திருநாவுக்கரசு சுவாமிகளைச் சமண சமயத்திலிருந்து மீட்டுச் சைவத்திற்குஅளித்த ஞானகுரு, திலகவதி அம்மையார். சம்பந்தரும், அப்பரும், சுந்தரருமாகிய மூவரும், உலகியலிலிருந்து விடுதலைபெற்று, இறையியலிற் புகுந்த முதல் வேளையில் பாடிய திருப்பதிகங்களை 'தோடு கூற்றுப் பித்தா மூன்றும் பீடுடைத் தேசிகன் பேரருளாகும்' என்று, குருவருளாகப் பெரியோர் கூறினர்.

'முத்திக்குச் சாதனமாகிய ஞானம் குருவருளாலன்றிக் கிட்டாது' என்பது ஞானநூன்முடிபு. இதனாலேயே சிவஞானபோதம் எட்டாஞ் சூத்திரத்தில் குருவருளையும் ஒன்பதாஞ் சூத்திரத்தில் சாதன முறையையும் பத்தாஞ் சூத்திரத்திற் பாச நீக்கத்தையும் பதினோராஞ் சூத்திரத்தில் சிவப்பேற்றையும் கூறுவதாயிற்று.

நிறைந்த உலகியலறிவும் சிறந்த கலையுணர்வும் பெற்றிருந்த மருணீக்கியாருக்குக் குருவருள் கூடாமையினாலேயே போய்ச் சமய வொழுக்கத்திற் பற்று உண்டாயிற்று. அக் குருவருள் கூடாமையையே 'நம்பர் அருளாமை' என்று

சேக்கிழார் பெருமான் அருளிச்செய்தார்.

முன்னைப் பிறப்பில் முனிவராயிருந்து, சிவபெருமானை அடைதற்குரிய சரியை கிரியையோகங்களைச் செய்த மருணீக்கியாருக்கு, ஞானந் தலைப்படுதற்குரிய குருவருள் கூடுங்காறும், அவர் வேற்றுச் சமய வயப்பட்டு நின்றாரென்பதும், அக்குருவருள்கிடைத்தற்குரிய பருவம் வந்து கூடியதும், சூலைநோய் உண்டாகிச் சைவசமயப் பிரவேசம் நிகழ்ந்ததென்பதும் உணரத்தக்கனவாம்.

'திருவாளன் திருநீறு திலவதியார் அளிப்ப' என்பதிற் குருவருளையும் 'தம் முன்பு வந்தார்பின் தாம் வந்தார்' என்பதிற்சாதனமுறையையும் 'நீறணிந்தார் அகத் திருளும் --மாறவருந் திருப்பள்ளியெழுச்சி' என்பதிற் பாச நீக்கத்தையும் 'தம்பிரான் திருவருளால்--உணர்வு பெற உணர்ந்துரைப்பார்' என்பதிற் சிவப்பேற்றையும் உய்த்துணர வைத்தார் சேக்கிழார் பெருமான்.

தம்மை மணக்க இருந்த கணவனார் இறந்தாரென்பதை அறிந்து, அவருயிரோடு தம்முயிரையும்இசைவிக்கத் துணிந்த அம்மையார் 'தம்பியார் உளராக வேண்டுமென வைத்த தயா'வினாலேயே, அம்பொன்மணி நூல்தாங்காது அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி, இம்பர் மனைத் தவம் புரிந்து இங்கு வாழ்ந்திருந்தார். இங்கே, அனைத்துயிர்க்கும் அருள் தாங்கி' என்று குறிக்கப்பெற்றதன் உள்ளுறை ஊன்றிச் சிந்திக்கத் தக்கதொன்றாகும்.

நாயனாரைச் சமய குரவராக்கி அவர் வழியாக அவர் அடிச்சுவட்டைப் பின் பற்றி யொழுகுகின்ற அனைத்து மக்களுக்கும், அருள்புரியக்கருதினார்அம்மையார் என்ற குறிப்பு 'அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி என்பதனாற் புலப்படுவதாகும்.

தவஞானப் பெருஞ் செல்வியாகிய திலகவதி அம்மையின் திருநாள் **10-2-56** வெள்ளிக்கிழமையென்பதை நினைவூட்டி அம்மையின் ஞானநோக்கம் நமக்குநிறையக் கிடைக்க வேண்டிக்கொள்ளுகிறோம்.

---

# ஹென்ரி போர்டு

( ஜி. என். ராதாகிருஷ்ண )

(முன்தொடர்ச்சி)

இவ்வாறு ஒவ்வொன்ருய்ப் பகுதிகள் இணைக்கப்பெற்று இறுதியில் கார் உருவாகும். அதுவே அவர்கண்ட முறை. இம்முறை முற்றும் புதிதாய் இல்லாவிடினும், அதனை அவர் மோட்டார்த்தொழிலில் தழுவியது மிகப்பெரிய நிகழ்ச்சியேயாகும். அதற்குமுன் ஒருகாரின் பகுதிகளைப் பொருத்திக் கார் உருவாக்குவதற்கு 6மேணி நேரமாயிற்று. இந்தப் புதுமுறையால் அதனை 93 நிமிஷங்களில் உருவாக்கக்கூடியதாயிற்று. எனவே, போர்ட், கார் விலையை அதிகமாகக் குறைத்து விற்ருர். எண்ணிறந்த மக்கள் கார் வாங்கக்கூடியதாயிற்று.

இது குறித்த கதை ஒன்று உண்டு. காரின் பகுதிகள் செய்யும் விசேஷ இயந்திரம் ஒன்றை போர்டு தொழிற்சாலைக்குச் செய்து கொடுக்குமாறு போர்டு என்ஜினியர் ஒருவர் ஏற்பாடு செய்தார். மணிக்கு 200 பகுதிகள் செய்யவேண்டும் என்பது ஒப்பந்தம். அதனைச் செய்து கொடுப்பவர், 'நாளொன்றுக்கு 200 என்பதற்குப் பதிலாக மணிக்கு 200 என்று தவருக எழுதிவிட்டீர்கள் போலும்' என்று சொன்னர். எந்த இயந்திரமும் அவ்வாறு செய்யமுடியாது என்பது அவர் நினைப்பு.

'அதில் தவறு ஒன்றுமில்லை; மணிக்கு 200பகுதிகள் செய்தல் வேண்டும். உங்களிடம் சொல்வதற்கு முன்பே நாங்கள் ஒரு இயந்திரம் செய்து பார்த்தோம். அது மணிக்கு 200 பகுதிகள் செய்கிறது. வந்து பாருங்கள்' என்று போர்டு தொழிற்சாலை என்ஜினியர் சொன்னர்.

முடியாது என்று நினையாதவர்கள்.

குறைந்த நேரத்தில் சிறந்த உற்பத்தி செய்யும் இயந்திரத்தைக் கண்டு பிடிக்கும்போதெல்லாம் ஹென்ரி போர்டுக்கும் அவருடைய என்ஜினியர்களுக்கும் குழந்தைகளுக்கு அதிசயமான ஒரு பொம்மை கிடைத்தால் மகிழ்ச்சி ஏற்படுவதுபோல மகிழ்ச்சி ஏற்படும். தொழிலாளி ஒருவன் ஒரு புதுவிஷயத்தைச் சொல்லிவிட்டால், போர்டு அவ

னுக்கு வெகுமதியாக ஏராள மான பணம் கொடுப்பார். போர்டு தொழிற்சாலை விநோத மான முறைகளைக் கையாண்டு செயற்கருஞ் செயல்களைச் செய் யும் அற்புதமான தொழிற்சாலை யாக விளங்கியது. அந்தத் தொழிற்சாலையில் உள்ளவர்கள் தங்கள் திறமையைப் பற்றிய நம்பிக்கையுள்ளவர்களாகஇருந்த தால், தங்களுக்குப் போட்டி யாக உள்ள கார்க் கம்பெனிக் காரர்களைத் தங்கள் முறைகளை வந்து பார்க்கும்படி அழைத் தார்கள். 'நிபுணர்கள்' எனப்படு வோரிடம் போர்டுக்கு நம்பிக்கை கிடையாது. ஆதலால்,இவ்வாறு அருஞ்செயல்கள் செய்யக்கூடிய தாயிற்று.

'விஷயத்தைப்பற்றி முன்னே அறியாதவர்களைக் கொண்டு தான் புதிய வேலைகளையெல்லாம் செய்கிறோம். ஆதலால் தான் எது ஒன்றையும் செய்யமுடியா தது என்று சொல்லும் நிலைமை ஏற்படுவதே இல்லை' என்று அவர் சொல்லியிருக்கிறார்.

எவ்வாறு அவர் எண்ணத் தில் புதிய கருத்துக்கள் தோன் றின என்று அவரிடத்தில் ஒரு முறை கேட்டார்கள். 'யாதே னும் எண்ண வேண்டும் என் னும் விருப்பம் இருந்தால் போதும்; நாம் நம் வேலையைச் செய்துகொண்டேபோனால் திடீ ரென்று புதிய கருத்து நமது உள்ளத்தில் தோன்றும்' என்று அவர் அக்கேள்விக்கு விடை யிறுத்தார்.

போர்டுக்குப் புதியன கண்டு பிடிக்கும் ஆற்றல் இருந்தது மன்றி, மிகத் திறமையாய் வாணிபத்தை நடத்தும் தகுதி யும் இருந்தது. அவர் சென்ற நூற்றாண்டில் பல தந்திரமான காரியங்களைச் செய்திருக்கிறார். ஒருமுறை அவர் தமது தொழிலை மிகவும் விரிவுபடுத்தி னார். அவருக்குப் பணமே இல் லாமற் போகக்கூடிய நிலைமை ஏற்பட்டது. ஆயினும் அவர் தம் தொழிலை மிகவும் விரிவு படுத்தியதால், இரண்டு வருஷத் திற்குள் அவரது வருவாய் இரு மடங்கு பெருகியது.

'போர்டு சமாதானக் கப்பல்'

ஹென்ரி போர்டு தமதுவாழ்க் கையின் பிற்பகுதியில் தேசத்தி லுள்ள பெரியவர்களுள் ஒருவ ரானார். அக்காலத்தில் ஜனாதி பதிகள் அவரைப் பார்க்கவந் தார்கள். அவரே ஜனாதிபதி தேர்தலில் நிற்கப்போகிறார் என் னும் பேச்சும் இருந்தது. 1923ல்

ஜனதிபதி கூலிட்ஜை எதிர்த்து நிற்கத் தாம் விரும்பவில்லை என்று போர்டு அறிவித்தார். அப்போது ஜனதிபதி கூலிட்ஜ் தாம் அதனை ஒரு பெருஞ் சிறப்பாகக் கருதுவதாகத் தந்தி கொடுத்தார். நல்ல வேலை செய்கின்ற ஒருவரைத் தாம் எதிர்க்க விரும்பவில்லை என்று போர்டு சொன்னர்.

முதல் உலக யுத்தத்தை நிறுத்துவதற்கு அவர் செய்த முயற்சி உலகைக்கவர்ந்தது. நடுநிலைமை நாடுகள் போர் நிறுத்த முயற்சிசெய்ய வேண்டும் என்பது அவரது கருத்து. பின்னர் 'போர்டு சமாதானக்கப்பல்' என்று பெயர் பெற்ற ஆஸ்கர் என்னும் கப்பலில் யுத்தமே கூடாது என்னும் கூட்டத்தைச் சேர்ந்தவர்களையும், மற்றும் லக்ஷியவாதிகளையும் ஏற்றி நார்வே, சுவீடன் என்னும் நாடுகளுக்கு அவர் அனுப்பினர்.

1947ல் போர்டு இறந்தார். ஆனல் மிகப்பெரிய தர்ம ஸ்தாபனம் ஒன்றை அவர் நிறுவிச் சென்ருர். அந்த ஸ்தாபனம் இன்று உலகிலுள்ள பல நாடுகளுக்கு உதவி அளிக்கிறது. இந்தியாவின் சமூக நலத் திட்டங்களுக்கு அந்த ஸ்தாபனம் உதவி அளிப்பது அதற்கு ஒரு சிறந்த உதாரணம்.

இன்று ஹென்ரி போர்டு இல்லையெனினும், அவரது மாபெரும் அறநிலையத்தின் மூலமாய் அவர் பெயர் என்றும் நிலவுகிறது.

## மெய்கண்டார் கழகம்

தேசமெல்லாம் புகழ்ந்தாடுங் கச்சித் திருநகர்க்கண் உள்ள பாக்கிசர் திருக்கோயிலில் 5-2-56 ஞாயிறு காலை திருமுழுக்கு வழிபாடு 1058வது வார வழிபாடாக நடைபெற்றது. சிவஞானபோதக் கூட்டுப் பிரார்த்தனைக்குப்பின், மதுரை ஆதீனப் புலவர் மாமணி திரு ஞானசம்பந்தமுதலியார் 'கலிக்காமநாயனர்' புராணம் பற்றி விரிவுரை நிகழ்த்தினர். நாயன்மார்கள் செய்த தொண்டுகள் அன்பின் உறைப்பாடுடையன என்றும் இறைவன் கொள்ளும் வடிவங்களில் அடியார்கள் வடிவமும் ஒன்று என்றும் விருந்தினர் அடியார்களே என்றும் 'நல்விருந்து' 'விருந்தொடேன் ஞதமுன்னம் என்ற தொடர்கள் சிந்திக்கத்தக்கன என்றும், உலக உண்மைகளில் மகேச பூசையும் ஒன்று என்றும் கூறி விளக்கினர். வேலூர் ஸ்ரீ இராமநாதன் அவர்கள் அனைவருக்கும் நன்றி கூறித், திருவாசகப் பாடல்களால் யாவரையும் இன்புற வைத்து வாழ்த்துக் கூறினர்.

## பள்ளிகளில் சமயக் கல்வி

பம்பாய் பிப் 5-

இராமகிருஷ்ண நிலையத்தின் சார்பில் சுவாமி விவேகானந்தரின் 94வது பிறந்தநாள் விழா நேற்று இங்குக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவில் பம்பாய் பிரதேசக் காங்கிரசுக் குழுத் தலைவர் திரு எஸ் கே படீல் பேசினார்.

பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் சமயக்கல்வி மிகமிக அவசியமானதென்று திரு படீல் வலியுறுத்தினார்.

'இந்தியா சமயச் சார்பற்ற அரசாங்கத்தைக்கொண்ட நாடு, ஆகவே இந்நாட்டில் கல்வி நிலையங்களில் சமயக் கல்வி இடம் பெறக்கூடாதெனச் சிலர் கூறக் கூடும். சமயச் சார்பற்ற சனநாயகம் என்பதற்குச் சமயநம்பிக்கையற்ற சமுதாயத்தை வளர்ப்பதென்பதுதான் பொருளென்றால் அந்த சனநாயகத்தால் ஒரு பயனும் விளையமுடியாதென நான் கருதுகிறேன்' என்று திரு படீல் மேலும் கூறினார்.

'ஒவ்வொரு சமயத்தைப்பற்றியும் கல்விநிலையங்களில்போதனை செய்யப்படவேண்டும். ஆனால் ஒரு சமயத்தினர் மீது அவர்களுடைய விருப்பத்திற்கு மாறாக மற்றொரு சமயக்கல்வியைத் திணிக்கக் கூடாது'என்று திரு படீல் மேலும் கூறினார்.

## நிதி திரட்டும் திட்டம்

வெளிநாடுகளிலுள்ள அகதிகளுக்கும் மற்றும் உதவி தேவையாய் இருப்போருக்கும்உணவும், மருந்துகளும் மற்றும் அவசியமான பொருள்களும் கொடுப்பதற்கு 1956-ல் 1,09,00,000 டாலர் நிதி திரட்ட அமெரிக்காவிலுள்ள புராட்டஸ்டாண்ட் சபைகளும் கிழக்கத்தியபுராதன சபைகளும் திட்டஞ் செய்கின்றன. தேசியக் கிறிஸ்தவக் கவுன்சிலைச் சேர்ந்த 35 சபைகள் எட்டு ஆண்டுகளாகச்செய்துள்ள கூட்டு முயற்சியில் இந்தத் தொகையே மிகவும் அதிகமானதாகும். நெடுங்கால சுகாதார சத்துணவுத் திட்டங்களுக்கும், அகதிகளைக்குடியேற்றி அவர்களுக்குப் புதுவாழ்வளிப்பதற்கும் அந்த நிதிஆதரவளிக்கும். இந்தியா, பாகிஸ்தான், கொரியா, ஜப்பான், கிரீஸ், ஜெர்மனி, இத்தாலி, வியட்நாம், ஹாங்காங்ஆகியவை உள்ளிட்ட பிரதேசங்களுக்கு உதவி அளிக்கப்படும்.

## இளவரசுப் பட்டமளிப்பு விழா

திருப்போரூர் 26-1-56-

இன்று காலை 4-30மணிக்குச் சென்னை அடியார் மன்றம் திரு, M P S வேலாயுதம்பிள்ளை அவர்கள் மயிலத்திலிருந்து ஸ்ரீ ல ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகளையும், இ ள வ ரசுப்பட்டமேற்கும் ஸ்ரீ சிவப்பிரகாசம் அ வ ர் க ளை யும் அழைத்துக்கொண்டு வ ந் தார் கள். 8-30 ம ணி க் குச் சிதம்பர சுவாமிகள் மடாலயத்தில் ஆதி சிதம்பர சுவாமிகள் வ ழி பா டு நடைபெற்றது. பின்னர் ஸ்ரீ கந்தப்பெருமான் வழிபாடு ந டை பெற்றது. ஸ்ரீ சி த ம் பரசுவாமிகள் ம ட ா ல யத்தில் இப்போதுள்ள பன்னிரண்டாம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சண்முகசுவாமிகள் ஸ்ரீ சிவப்பிரகாசம் அவர்களுக்குசிதம்பரசிவப்பிரகாசசுவாமிகள்என்ற தி ரு நாமத்துடன் விசேட தீட்சை செய்து இளவரசுப்பட்டம் அளித்தார்கள்.

ஸ்ரீ கந்தப்பெருமான் ஆலயத்தில் சொற்பொழிவு நடைபெற்றது. ஸ்ரீ சி த ம் ப ர சண்முக சுவாமிகள் அருளுரையும் ஆசியுரையும் வழங்கியதன் பின்னர் உள்ளூர் அ ன் ப ர் க ள் பலரும் சென்னை அடியார் மன்றத்தினரும் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பா ல ய சுவாமிகளையும்- தி ரு ப் போரூர் இளவரசு ஸ்ரீ சிதம்பர சிவப்பிரகாசம் அவர்களையும் வரவேற்று மகிழ்வுரை வழங்கினர். ஸ்ரீ இளவரசு அவர்கள் ஸ்ரீ சி த ம் ப ர சுவாமிகளின் தி ரு ப் போரூர்ச் ச ந் நி தி முறையின் நயங்களை எடுத்துக்கூறி அ வ ர் கள் திருவருள் வழியில் ப ங் கு கொள்வதாகப் ப தி ல் மொழிந்தார்கள். மயிலம் - பொம்மபுரம் ஆ தீ ன வெளியீடாக மயிலம் த மி ழ் க் கல்லூரி ஆசிரியர் ஐவர் எழுதிய கட்டுரைகொண்ட 'இ ள வ ரசு நினைவுமலர்' ம யி ல ம் ம ட ம் இளம்புரவலர், திரு வித்துவான் கு. சி வ சுப்பிரமணியம் அவர்களால் வெ ளி யி ட ப் பெற்றது. வாழ்த்துரைகள் ப ல ர ா லு ம் அளிக்கப்பட்டன.

பேரூர் ஸ்ரீ ல ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் மடாலய இ ள வரசு ஸ்ரீ இராமசாமி அடிகள் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ சிதம்பரம் சிவப்பிரகாசம் அவர்களுக்குப் பொன்னாடைபோர்த்தி வா ழ் த் துரை அளித்தார்கள். தி ரு வ ா ள ர் வேலாயுதபத்தர் (வி ழு ப்புரம்) அவர்கள் ஸ்ரீ இ ள வ ர சு க்குத் தங்க விபூதிப்பெட்டகம் அளித்

தார்கள். அன்பர்கள் பலர் காணிக்கை வழங்கிச் சிறப்பித் தார்கள்.

பிற்பகல் ஸ்ரீ ல ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் தலைமையில் அன்பர்கள் பலர் சொற்பெருக் காற்றினர்.

இரவு கந்தப்பெரு[illegible]ர் வெள்ளிமயில் வாகனவீதி[illegible] உற்சவம் சிறப்புற நடந்தது.

---

## பசுமடம் நிறுவ நிதி

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள், சுவாமிமலையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவாக ஓர் பசுமடம் நிறுவுவதற்காக ரூபாய் 30 ஆயிரம் நிதி வழங்கியுள்ளார்கள்.

மேற்படி நிதியின் ஆண்டுவருமானத்திலிருந்து பசுக்கள் வாங்கி வளர்ப்புச்செய்து பால் கறந்து தினந்தோறும் ஸ்ரீ சாமிநாத சுவாமிக்கு அபிடேகம் செய்து அந்தப்பாலைக் குழந்தைகளுக்கு விநியோகம் செய்து கொண்டு வரப்படும். அதற்காக வேண்டிய சான்றுகள் திருவிடைமருதூர் பதிவகத்தில் 28-1-56 அன்று பதிவு செய்யப்பட்டன.

---

## நோட்டீஸ்

சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

O. P. 6 of 1956

முத்தையாசெட்டியார்—மனுதார்

1. அம்மையப்ப செட்டியார்,
2. சத்யமூர்த்தி செட்டியார்

—எதிர்மனுதார்கள்

PL. A. M. M. முத்துக்கருப்பன் செட்டியாரின் இன்சூரன்ஸ் தொகைக்கு மனுதார் & எதிர் மனுதார்களுக்கு வார்சு சர்ட்டிபிகேட் பெற, மனுதார் மனுக் கொடுத்து 25-2-56 வாயிதா ஆட்சேபணையை அன்று முற்பகல் 10 மணிக்கு ஷை கோர்ட்டில் தெரிவித்துக்கொள்ளலாம்.

எஸ். வெங்கடேஸ்வரய்யர்

சிவகெங்கை 1-2-56 } மனுதார் அட்வகேட்




அணிமலர்:- மதுரைத் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் ஆதீனம், 290வது பட்டம் ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத தேசிக குரு மகாசந்நிதானம் அவர்களின் 60ம் ஆண்டு நிறைவு விழா அணிமலர். ஆதீன அன்பன் இராம சிவநேசன் ஆக்கியது.

திருப்பூவனூர்த் திருப்பதிகம்:- தருமபுர ஆதீன வெளியீடுஎண் 360. ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களின் 1-2-56 மாத ஜன்ம நட்சத்திர நாளில் வெளியிடப் பெற்றது. வழக்கம்போல் ஆதீனத் தேவார பாடசாலை ஆசிரியர் திரு ஆர் வேலாயுத ஓதுவா மூர்த்திகள் தலச்சிறப்பு - உரை ஆகியன எழுதியுள்ளார்கள்.

சைவ தோத்திர மஞ்சரி:- தினசரி பாராயணத்திற்கும் கூட்டு வழிபாட்டிற்கும் ஏற்ற முறையில் வித்துவான் தி பட்டுச்சாமி ஓதுவாரவர்களால் தொகுக்கப் பெற்றது. பன்னிரு திருமுறை தலபுராணங்கள், மற்றும் பல நூல்களினின்று தொகுத்தெடுத்த பாடல்களைக் கொண்ட 96பக்கங்களையுடைய இப் புத்தகத்தின் அடக்க விலை அணா ஐந்து. கிடைக்குமிடம், அருள் நந்தி நிலையம் 9, கடைவீதி ...நகர் திருச்சிராப்பள்ளி,

டுத்த

## ...காவில் திருமணம்

மன்மத தை 20ம் நாள் புதன் கிழமை கோவிலூர் ஈஸ்வர சன்னதியில் திரு சு பழநியப்பா அவர்கள் தலைமையில் பகல் 11 மணிக்கு காரைக்குடி வெ கு நா நாராயணஞ்செட்டியார் மகன் (நேமம்) மெய்யப்பனுக்குமராய வரம் புதூர் கு அழ அழகப்ப செட்டியார்மகன் (வயி தெ) முருகாமிர்தத்துக்கும் கானாடு காத்தான் திரு சா ராம அருராமசாமி செட்டியார் பொருளுதவியால் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. சுற்றத்தாரும், நேசர்களும்வந்திருந்து கலந்து கொண்டனர்

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.